## ஆசிரியர் குழு



## உள்ளுறை

உ

திருச்செந்திலாண்டவன் துணை

# 'அருள் நந்தி நகர்' பெயர் சூட்டுவிழா

## ஸ்ரீவைகுண்டம் — பத்மநாபமங்கலம்

அறம் வளர்க்கும் அண்ணல் திருப்பனந்தாள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள், ஸ்ரீவைகுண்டத்தில் குமரகுருபர சுவாமிகள் திருப்பெயரால் ஆர்ட்ஸ் காலேஜ் நிறுவுவதற்குத் திருவுளங்கொண்டு ஐந்து இலட்சம் ரூபாய் பெறுமதியுள்ளதும், வருஷ வருமானம் ரூ. 15,000/- உள்ளதுமான ஸ்தாபரச் சொத்துக்களை மூலதனமாகவும் சேமிப்பு நிதிக்கென்று ரூ. 30,000/-மும் பெருங்கருணையுடன் அண்மையில் நன்கொடை வழங்கியுள்ளமை யாவரும் அறிந்ததே.

கல்லூரி அமைப்பதற்காக 50 ஏக்கர் பெருநிலப்பரப்பும் ரூ. 5000-மும் பத்மநாபமங்கலம் கிராமம் பொதுமக்களும் உயர்திரு. ஸ்ரீநிவாசக்கரையாளர் அவர்களுமாக மனம் உவந்து நன்கொடை அளித்துள்ளார்கள். ஷெ யார்களின் விருப்பத்திற்கிணங்கவும், ஸ்ரீவைகுண்டம் பொதுமக்களுடையவும், ஆர்ட்ஸ் காலேஜ் கமிட்டியாரின் கோரிக்கைப்படிக்கும் 3—4—61-ல் கல்லூரிப் பெருநிலப்பரப்பிற்கு '**அருள்நந்திநகர்**' எனப் பெயர் சூட்டப்பெற்றது. இவ்விழாவிற்காக அமைக்கப்பெற்ற பந்தலில் கூடியிருந்த பத்மநாபமங்கலம், ஸ்ரீவைகுண்டம் பெருமக்கள் அன்றுகாலை 10 மணி அளவில், விழாத்தலைவர் நெல்லை வள்ளல் உயர்திரு. சி. ச. அருணசலம் பிள்ளை அவர்களை ஊர் முகப்பிலிருந்து மேளதாளங்களுடன் வரவேற்று பந்தலுக்கு அழைத்து வந்தனர். பெருநிலப்பரப்பின் தலைப்பில் அமைக்கப்பட்டிருந்த '**அருள்நந்தி நகர்**' வளைவுக்கு அருகில் விழாத்தலைவர் வரவும் திருமுறைவாணர்கள் திருமறைக்காட்டுக் கடைத்திறப்புப் பதிகம் பாட தலைவரவர்களும் வந்திருந்த பொதுமக்களனைவரும் பந்தலுக்குள் வந்து அமர்ந்தார்கள்.

இறைவணக்கம் பாடியவுடன், கமிட்டித்தலைவர் உயர்திரு. T. M. குமரகுருபரன் பிள்ளை அவர்கள் விழாத்தலைவர் அவர்கட்கு வரவேற்புரை நிகழ்த்தி வரவேற்பிதழும் வாசித்தளித்தார்கள். தலைவர் அவர்கள் தம் உரையில், ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களின் பெருங் கருணைக் கொடைத்திறனையும், கல்லூரிப் பெருநிலப்பரப்பிற்கு ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் திருப்பெயரைச் சூட்டுவதன் சிறப்புப் பொருத்தத்தையும், ஸ்ரீவைகுண்டம் வட்டாரத்து இளைஞர்கட்கு வாய்த்திருக்கும் நற்பேற்றையும் விளக்கிக்கூறி 'அருள்நந்தி நகர் வளர்க! வளர்க!! வளர்க!!!' என வாழ்த்தினர்கள். ஷ கமிட்டி காரியதரிசி டாக்டர் உயர்திரு. வெங்கட சுப்பிரமணியம் அவர்கள் நன்றிகூற இன்னிசை வாழ்த்துடன் விழா இனிதே நிறைவெய்தியது. உயர்திரு. ஸ்ரீநிவாசக்கரையாளர் அவர்கள் விழாவிற்கு வந்திருந்தோர் அனைவருக்கும் தம் வீட்டில் சிற்றுண்டி விருந்தளித்தார்கள்.



உ

திருச்செந்திலாண்டவன் துணை




மலர் 12 | பிலவ-ஹு சித்திரைத் திங்கள் 1-ம் உ [13-4-61] | இதழ் 4

# சிதம்பரச் செய்யுட் கோவை

மாணிக்கவாசக அடிகள்,

மாயூரம்.

[ கட்டுரை 45 ]

மழையின்றேல் மாநிலம் இல்லை, "விசும்பிற்றுளி" வீழின் அல்லால் மற்று ஆங்கே பசும்புற்றலை காண்பரிது." பூங்காவும் தேம்பொழிலும் புனல் இன்றேல் இல்லை. அதனால், 'கனம் அளித்த பைங்கா' எனப்பட்டது. கனம் - மேகம். அளித்தல் - அன்புமுதிரப் பெற்றுப் புரத்தல். அன்பின் முதிர்ச்சியே அளி எனப்படும். அதன் குளிர்ச்சியும் தோன்றத் 'தண்ணளி' என்பதும் ஈண்டு அறியத்தகும்.

காவில் கமுகமரங்கள் முதலிய யாவும் ஓங்கிவளர்தல் இயல்புதானே! அப்பாக்குமரங்களின் பாளையைத் தரளம்

(-முத்து) என்றும் பழத்தைப் பவளம் என்றும் கூறுப, காயை மரகதம் என்பர். திருஞானசம்பந்தர் 'எண்ணார் முத்தம் ஈன்று மரகதம் போற்காய்த்துக், கண்ணார்கமுகு பவளம் பழுக்கும் கலிக்காழி' என்று பாடியருளியதும் காண்க. அவ்வழக்கே, "கனமளித்த பைங்காவில் வெண்டரளமும் பவளமும் கமுகுஈன" எனப் பட்டதில் அமைந்தது.

புனம் (-முல்லைநிலம்) கொன்றைக்கு இடமானது, அந்நிலத் துப்பூவே கொன்றைப்பூ. அதனால், 'புனம் அளித்த பூங்கொன்றை' என்று கூறப்பட்டது. அதன் பூக்களைத் திருமுறையில் வெவ் வேறு திறத்திற் கூறினர் நம் அருளாசிரியர். அவற்றுள் ஒன்று பொன்னிறத்தது எனல், அவ்வுண்மை 'கொன்றை பொன் சொரிதர' என்றதால் அறிவிக்கப்பட்டது. 'பொன்' என்றது பொன் போன்ற பூக்களை, முத்துக்களுக்கும், பவளங்களுக்கும், பொன்னுக்கும் உறைவிடம் பைங்கா என்பது உணர்த்தப் பட்டது. அத்தகுசிறப்புடையது தில்லையம்பதி.

அவ்வாறு சிறந்து விளங்கும் தில்லைப் பைஞ்சோலையில் தரளங்களும் பவளங்களும் ஈன்று தரும் பாக்குமரமும் பொன்னைச் சொரியும் கொன்றைமரமும் மிக்குள்ளன. அவற்றில் அம்முத்து முதலியன தோன்றத் தில்லை அம்பலத்தே 'புண்ணியம்' மலர்கின்றது. அலர்கின்றது. சிவபரஞ்சுடர்க்குப் 'புண்ணியம்' என்பதும் பெயராகும். 'புண்ணியனைப் பூசித்த புண்ணியத் தினாலே' என்பது சிவஞானசித்தியார். அத்தில்லைவனம் பைங்கா வைப்போலப்பல தோற்றுமல் ஏழுலகிற்கும் ஆக ஒரே பழத்தை அளித்தது. அறிஞர் அறிவர்; பலம் பழம் என்னும் இரண்டும் முறையே வடசொல்லும் தென்சொல்லும் ஆயினும், பொருளால் ஒன்றென்று.

பலாஹாரம் ('பலகாரம்') என்பது பழவுணவு என்னும் பொருட்டே. வழக்கில் பலகாரங்கள் ஆயிருக்கிற உண்மைக்கு அதுபொருந்தாது.

தில்லைவனம் அளித்த பலம் பொன்னம்பலம், அதுவே ஏழு லகிற்கும் ஒருபலம். உலகம் பொழில், எனப்படும். தில்லைப்

பொழில் அளித்த ஒருபழம் ஏழுலகிற்கும் உரியதொருபழம் ஆயிற்று. ஏழுலகமும் சிவகாமியம்மையாரால் படைக்கப் பட்டவை. மாயையிலிருந்து தோன்றும் எல்லா வுலகங்களும் அச்சிவசத்தியால் ஆனகாரியங்களே.

"தேரின்மண் மாயையாகத் திரிகைதன் சத்தியாக
ஆரியன் குலால ஞய்நின் ருக்குவன் அகிலம்எல்லாம்".

அச்சத்தியை இங்கே அன்னம் என்ருர் ஆசிரியர். அந்த அன்னம் கடலில் திளேத்து ஆடும். அக்கடல் ஆநந்தமாக்கடல். அது தனிப்பெருங்கடவுள். அதஞல் ஓர் ஆநந்தமாக்கடல் ஆயிற்று. அதுவே நடராஜ ரூபத்தில் நின்று உணர்த்தி விளங்குவது.

ஒருபொழில் அளித்த பழம் ஏழுபொழிலுக்கும் உரிய தொன்ருய் நின்றது என்ற நயம் இதில் அமைந்தது.

"கனம்அ ளித்தபைங் காவில்வெண் டரளமும்
பவளமும் கமுகீனப்
புனம்அ ளித்தபூங் கொன்றைபொன் சொரிதரப்
புண்ணிய மலர் தில்லே
வனம்அ ளித்ததே எனினும்ஓர் ஆனந்த
மாக்கடல் திளேத்தாடும்
அனம்அ ளித்தஏழ் பொழிற்கும்ஓர் பலம்என்பது
அம்பொ னம்பலந்தானே." (52)

குறிப்பு:- கனம் - மேகம். தரளம் - முத்து. புனம் - முல்லேநிலம். ஆனந்தமாக்கடல் - நடராஜப்பிரான். அனம் - அன்னம் - சிவகாமியம்மையார் (சிவசத்தி, ஜகந்மாதா). ஏழ் பொழில் - ஏழுலகு, பலம் - பயன், பழம். அழகிய பொன்ஞலான பழம் அம்பொன் அம்பலம்.

---

(தொடரும்)

# அம்பலவன் பழூவூர்நக்கன்

சிவநெறிச்செல்வர் வித்துவான்,
**திரு. கே. எம். வேங்கடராமையா அவர்கள், M. A. B. O. L.,**
திருப்பனந்தாள்.

கோவந்தபுத்தூர், விசயமங்கை

**கோ**வந்தபுத்தூர், கொள்ளிடத்தின் வடகரையிலுள்ள பாடல் பெற்ற சிவதலம். இதனை அப்பரும், சம்பந்தரும் பாடியுள்ளனர். கோவந்தபுத்தூர் என்பது ஊரின் பெயர்; விசய மங்கை என்பது திருக்கோயிலின் பெயராகும். இதனை,

'கொள்ளி டக்கரை கோவந்த புத்தூரில்
வெள்வி டைக்கருள் செய்விச யமங்கை'

என்ற அப்பர் தேவாரத்தான் அறியலாம்.

ஒரு பசு சிவலிங்கத் திருமேனியின்மீது பால் சொரிந்(து அபிஷேகம் செய்)தமையால் இதற்குக் கோவந்தபுத்தூர் என்ற பெயர் எய்தியது என்பர். இது,

'கோதனம் வழிபடக் குலவு நான்மறை
வேதியர் தொழுதெழு விசய மங்கையே'

என்று ஞானசம்பந்தர் கூறியமையால் அறியப்பெறும். 'வெள் விடைக் கருள்செய் விசயமங்கை' என்று அப்பர் கூறியபடியால் இடபதேவருக்கு அருள் செய்த வரலாறும் இங்கு அறியப்படுவ தொன்றாகும்.

இனி, விசயன் (அருச்சுனன்) வழிபட்டமையால் இத் திருக் கோயில் விசயமங்கை என்ற பெயர் எய்தியதென்பர்.

---

"ஞானசம்பந்தம்" மலர் 20 இதழ் 2-ல் வெளிவந்துள்ள இக் கட்டுரை, அனுமதியுடன் பிரசுரிக்கப்பட்டது.

'பாண்டு வின்மகன் பார்த்தன் பணிசெய்து
வேண்டும் நல்வரங் கொள்விச யமங்கை'

என்ற திருநாவுக்கரசர் தேவாரம் இதனை வலியுறுத்தும்.

## பிரமதேயம்

'வேதியர் தொழுதெழு விசயமங்கை' என்று அப்பர் குறித்தமையின் இங்கு வேதியர்கள் பலர் வாழ்ந்திருத்தல் கூடும். இடைக்காலத்திலும் இத்தலத்தில் வேதியர் நிறைந்து வாழ்ந்திருந்தமையின் சோழர் கல்லெழுத்துக்களில் இவ்வூர் பிரமதேயமாகவே குறிக்கப்பெற்றது. 'வடகரைப் பிரமதேயம் பெரிய வானவன் மாதேவிச் சதுர்வேதிமங்கலம்' (165 of 1929) என்றமை காண்க. இச்சிலைமேல் எழுத்தினின்று இவ்வூர்க்குப் 'பெரிய வானவன் மாதேவிச் சதுர்வேதி மங்கலம்' என்ற பெயர் வழங்கிவந்தது என்றும் அறியலாம். இறைவன் விஜயமங்கலத்து மகாதேவர் எனப்பெற்றார். (164 of 1929)

## கோயில் திருப்பணி செய்தவன்

இச்சிறப்பு வாய்ந்த கோயிலைக் கருங்கல் திருப்பணி செய்தவனைக் குறித்துக் கோவிந்தபுத்தூர்க் கோயிலில் பல கல்லெழுத்துக்கள் கிடைத்துள்ளன. அத்தலைவன் 'அம்பலவன் பழுவூர்நக்கன்' என்ற பெயருடையவன். இவன் உத்தம சோழனது 10-ம் ஆட்சியாண்டு (கி. பி. 979) முதற்கொண்டு (170 of 1929), முதலாம் இராசராசனின் 7-ம் ஆட்சியாண்டு (கி. பி. 992) வரை (160 of 1929) கல்லெழுத்துக்களில் குறிக்கப் பெற்றுள்ளான்.

## சிறப்புப் பெயர்களும் பண்புகளும்

பழுவூர்நக்கன் உத்தமசோழனது பெருந்தரம்; உத்தம சோழனால் விக்கிரமசோழமாராயன்* என்ற சிறப்புப் பெயர் அளிக்கப்பெற்றவன் (164, 165 of 1929). இவன் குவளாலத்தி னின்று† போந்தவன் (166 of 1929; 291 of 1917); வேளாள

---

* இச்சிறப்புப் பெயரை அளித்தமையால், உத்தமசோழனுக்கு விக்கிரமசோழன் என்ற பெயரிருந்தமை அறியப்பெறும்.

† குவளாலம் - கோலார்.

குலத்தவன். பெருங் கொடையாளி. இவன் முதலாம் இராச ராசசோழனது மூன்றும் ஆட்சியாண்டில் விக்கிரமசோழ மகாராசன் என்று குறிக்கப்பெற்றிருப்பினும், மும்முடிச்சோழப்§ பெருந்தரம் என்று வழங்கப்பெற்றுன். இனி இராசராசனது 7-ம் ஆட்சியாண்டில் இவன் ராசராசப்பல்லவரையன் என்று குறிக்கப்பெற்றிருக்கிருன் என்று அறியப்படுதலின், இராசராச னும் தன் பெருந்தரத்து அதிகாரிகளில் ஒருவனுன இப்பழூவூர் நக்கனுக்கு இப்பட்டம் அளித்துச் சிறப்பு செய்தனன் என்பது தெள்ளிது.

### சிவத் தொண்டுகள்

அம்பலவன் பழூவூர்நக்கன் விசயமங்கைத் திருக்கோயிலேக் கல்லால் கட்டுவித்தமையோடு ஸ்ரீவிமானத்தையும் கல்லால் கட்டுவித்து (165 of 1929), நெடுவாயில் என்ற ஊரைத் தானமாக அளித்தான். இக்கோயிலில் "நான்கு வேளைகளிலும் திருவமுதுக்கு அரிசிக்கும், பொறிக்கறியமுது, நெய்யமுது, தயிரமுது, அடைக்காயமுது, சந்தனம், கற்பூரம் ஆகியவற் றுக்கும், ஆடியருளப் பாலுக்கும், ஆடைக்கும் நுந்தா விளக்கு ஐந்தினுக்கும், சிறுகாலே எட்டு - உச்சியம்போது எட்டு - இரவுக் குப் பதினுன்கு சந்தி விளக்குகளுக்கும்"‡ இந்நில வருவாய் பயன்படுத்தப்பெற்றது (175 of 1929).

இராசராசனது 3-ம் ஆட்சியாண்டில் விநயாபரணவிண்ண கர் எம்பெருமான் கோயிலில் முன்னர் உள்ள மண்டபத்தில் சபை கூடியது; இத்தலேவனிடம் இருந்து அச்சபையார் 2000 கழஞ்சு (பொன்னே) இறைகாவலாகப்* பெற்றுக் கொண்டு 1¼ வேலி நிலத்தை இறையிலியாக்கிக் கோவிலுக்கு அளித்தனர்.

---

§ மும்முடிச்சோழன் என்பது முதலாம் இராசராசனுக்கு வழங்கிய சிறப்புப் பெயர்களில் ஒன்று.

‡ தருமபுர ஆதீனப் பதிப்பு - சம்பந்தர் தேவாரம் - 3 ஆம் திருமுறை- கல்வெட்டுக் குறிப்பு - திரு. சு. வாண்டையார்.

* இறைகாவல் - பின்னுல் செலுத்தவேண்டிய வரிக்காக மொத்த மாகச் செலுத்தும் பணம் - (S. I. T. I. பாகம் 3, பக்கம் 1401).

இனி, இவ்வரசனது 7-ம் ஆட்சியாண்டில் இத்தலைவன் இத்திருக்கோயிலில் கூத்தப்பெருமானையும், உமாபட்டாலகியையும் எழுந்தருள்வித்து அவர்களுக்குப் பொன் அணிகலன்களை யளித்துள்ளான் என்று ஒரு கல்லெழுத்து (163 of 1929) நுவல்கின்றது.

## திருவிளக்குத் திருத்தொண்டு

பரகேசரிபன்மரது* 10 ஆவது ஆண்டில் ஒரு விளக்கு எரிக்கவும் (170 of 1929), 12 ஆவது ஆண்டில் 4 விளக்குகள் எரிக்கவும் (169 of 1929) இவன் ஆடுகளைத் திருவிசய மங்கையில் அளித்துள்ளான். இவனுடைய தொண்டு கூகூரிலும் நிகழ்ந்துளது. அங்கு ஒரு விளக்கு எரிக்க 90 ஆடுகளை அளித்ததாக ஒரு கல் வெட்டினின்று (291 of 1917) அறிகிறோம்.

## கோயிலதிகாரியை நியமித்தல்

இவன் இராசராசசோழனது 7-ம் ஆட்சியாண்டில் வங்கிப்புரத்துச் சேட்டபோசன் வெண்ணயகிரமவித்தன்‡ என்பானைக் கோயிலதிகாரியாக நியமித்தான் (160 of 1929). கோயில் காரியம் பார்ப்பவர்களை மேற்பார்வை செய்ய இவ்வதிகாரிக்கு உரிமை தரப்பெற்றது. அன்றியும் வேளாளர் இவனை எதிர்த்தால் வேலையினின்று நீக்கவும், பிராமணர் எதிர்த்தால் 25 களஞ்சு பொன் தண்டம் விதிக்கவும் இவற்கு அதிகாரம் அளிக்கப் பெற்றது (ARE 1929 II 29).

---

* பரகேசரி என்று மட்டும் உள்ள கல்வெட்டுக்களிலும், பரகேசரி உத்தமசோழன் என்றுள்ள கல்லெழுத்துக்களிலும் அம்பலவன் பழுவூர் நக்கன் குறிக்கப் பெற்றுள்ளான். ஆகவே இத்தலைவனைக் குறித்துள்ள பரகேசரிவர்மனது கல்வெட்டுக்கள் உத்தமசோழன் காலத்தவை என்பது திண்ணம்.

‡ கிரமவித்தன் - வேதத்தைக் கிரமமுறையில் அத்தியயனம் செய்தவன். [கிரமமாவது முதற்பதமும் இரண்டாவது பதமும் கூறிப் பின்னர் இரண்டாவது பதமும் மூன்றாவது பதமும் கூறிப் பின்னர் மூன்றாவது பதமும் நான்காவது பதமும் கூறி இங்ஙனமே தொடர்ந்து சொல்லுவது].

### பழுவூர்நக்கப்புத்தேரி

மேற்கூறியாங்கு இரண்டு பேரரசர்களால் சிறப்பிக்கப் பெற்றமையின், பழுவூர்நக்கன் சோழநாடு முழுவதும் நன்கு அறியப்பெற்றவனுக அந்நாளில் விளங்கியவனுதல் கூடும். இவன் காலத்துக்கு ஏறத்தாழ 60 ஆண்டுகளுக்குப் பிறகு (அதாவது இரண்டாம் இராசேந்திரனின் 4-ம் ஆட்சியாண்டில்) தரப்பெற்ற மணிமங்கல சபையார் சாஸசனத்தில் (S. I. I., Vol. III Part I No. 29) பழுவூர்நக்கப்புத்தேரி என்று ஓரேரி குறிக்கப்பெற்றுள்ளது. தொண்டைமண்டலத்து மணிமங்கலத்து இவ்வேரி இருந்ததாகக் காணப்பெறினும், இவ்வேரிக்குப் பெயர் இவன் பெயரையொட்டி யமைந்ததாகவே கொள்ளலாம்.

### இவன் மனைவியர்

இவ்வதிகாரிக்கு இருமனைவியர் இருந்தனர் என்று இரண்டு கல்லெழுத்துக்களினின்றும் அறியப்பெறுகின்றது. ஒருவர் அபராஜிதன் செய்யவாய்மணி என்பவர்; மற்ருெருவர் சிங்கபன்மன் காஞ்சி அக்கன் என்பவராவர். (அக்கன் என்றமையால் இவரே மூத்த மனைவியாதலும் கூடும்). இவ்விருவரும் விசய மங்கைக் கோயிலில் விளக்கு எரிக்க ஆடுகளை யளித்துத் தம் புகழை நிறுவியுள்ளார்கள்.

### புறவுரை

நெடுவாயில் தானசாஸனத்தில் “அறம் மறவற்க; அறமல்லது துணையில்லை” என்றுள்ள அறிவுரை கவனிக்கற்பாலது. இவ்வூரில் திருத்தொண்டத்தொகையான் திருமடம் இருந்தது (மூன்ரும் இராசராசன் காலத்தில்). ஒரு கல்வெட்டுத் தொடக்கத்தில் 'வாழ்க அந்தணர்' என்ற திருப்பாடல் எழுதப் பெற்றுள்ளது.

### முடிப்புரை

இத்தலைவன் உத்தமசோழன் காலத்தில் குவளாலத்தினின்று வந்திருந்தனன் என்றதிலிருந்து ஒரு அரசியல் செய்தி

(தொடர்ச்சி 227-ம் பக்கம் பார்க்க)

# மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்

## உரைநடை



தருமபுர ஆதீன வித்துவான்
"திருவண்ணாமலை ஆதீனவிரிவுரையரசு, மதுரை ஆதீனச் சித்தாந்த
சைவ வித்தகர், சித்தாந்தப் புலவர்மாமணி, பாலகவி"
**வயிநாகரம் திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,**
தேவகோட்டை.

---

(மலர் 12, இதழ் 4-ன் தொடர்ச்சி)

கைம்மல ரிற்பொலி கதிர்முத் தம்மனை
நகைமுத் தொளிதோயக்
கண்டவர் நிற்கப் பிறர்சிலர் செங்கைக்
கமலச் சுடர்கதுவச்
செம்மணி யிற்செய் திழைத்தன வெனவுஞ்
சிற்சிலர் கட்கடையின்
செவ்வியை வவ்விய பின்கரு மணியிற்
செய்தன கொல்லெனவும்
தம்மன மொப்ப வுரைப்பன மற்றைச்
சமயத் தமைவுபெறார்
தத்தமி னின்று பிதற்றுவ பொருவத்
தனிமுதல் யாமென்பார்க்
கம்மனை யாயவர் தம்மனை யானவ
ளாடுக வம்மனையே
அழகு தழைந்தகல் யாண சவுந்தரி
யாடுக வம்மனையே. 81

கைத்தாமரை மலரில் விளங்குகின்ற ஒளி பொருந்திய முத்துக்களாற் செய்யப்பெற்ற அம்மனைக் காய்களின் மீது பற்களாகிய முத்துக்களின் ஒளி படக் கண்டவர் நிற்க வேறு சிலர் சிவந்த கைத்தாமரை மலரின் ஒளி படுதலால் மாணிக்கங்கள்

குழைத்துச் செய்யப்பெற்றன வென்றும் வேறு சிலர் கடைக் கண்ணின் நிறத்தைக் கவர்ந்த பிறகு நீலமணிகளாற் செய்யப் பெற்றன வென்றும் தமது மனசுக்கிசைந்தபடி சொல்லுஞ் சொற்கள் புறச்சமய நெறிகளில் ஒழுகி மன அமைதி பெருத வர்கள் தங்கள் தங்களுக்குள் நின்று பிதற்றுஞ் சொற்களை நிகர்த்திருக்க ஒப்பற்ற முதற் கடவுள் யாமென்று சொல்லிச் செருக்கடைகின்ற மற்றைத் தேவர்களுக்குத் தாயகமானவ ராகிய சொக்கேசப் பெருமானுருக்குத் தாயானவளே! அம்மானை ஆடி அருளுவாயாக, அழகு மிகுந்த கல்யாண சௌந்தரியே! அம்மானை ஆடி அருளுவாயாக.

ஒள்ளொளி மரகத மும் முழு நீலமு
மொண்டர ளத்திரளும்
ஒழுகொளி பொங்க விழைத்திடு மம்மனை
யொருமுன் றடைவிலெடாக்
கள்ளவிழ் கோதை விசும்புற வீசுவ
கண்ணுதல் பாற்செலநின்
கையில் வளர்த்த பசுங்கிளி யும்வளர்
காமர் கருங்குயிலும்
பிள்ளைவெ ளோதிம மும்முறை முறையாற்
பெருகிய காதலைமேற்
பேச விடுப்ப கடுப்ப வணைத்தொரு
பெடையோ டரசவனம்
அள்ளல் வயற்றுயின் மதுரைத் துரைமக
ளாடுக வம்மனையே
அழகு தழைந்தகல் யாண சவுந்தரி
யாடுக வம்மனையே. 82

நல்லொளியையுடைய மரகதமும் முழுநீலமும் ஒள்ளிய முத்தின் தொகுதியும் பெருகுகின்ற ஒளியை வீசும்படி இழைத்த அம்மனைக்காய்கள் மூன்றை முறையாய் எடுத்துத் தேன் ஒழுகு கின்ற பூமாலையை உடையவளே! வானத்தில் செல்லும்படி நீ வீசுகின்ற காய்கள் சிவபெருமானிடத்தில் போகும்படி உன் கையில் வைத்து வளர்த்த பச்சைக் கிளியையும் அழகு வளரு

கின்ற கருங்குயிலையும் இளைய வெள்ளை அன்னத்தையும் முறை முறையாகப் பெருகிய அன்பை மேலே சென்று சொல்லும்படி விடுப்பதை நிகர்க்க அரச அன்னம் ஒப்பற்ற பெட்டையன் னத்தை அணைத்துச் சேற்றையுடைய வயலில் உறங்குகின்ற மதுரைத் துரைமகளே! அம்மானை ஆடி அருளுவாயாக. அழகு மிகுந்த கல்யாண சௌந்தரியே! அம்மானை ஆடி அருளுவாயாக.

### நீராடற் பருவம்

வளையாடு வண்கைப் பொலன்சங் கொடும்
பொங்கு மறிதிரைச் சங்கோலிட
மதரரிக் கட்கயல் வரிக்கய லொடும்புரள
மகரந்த முண்டு வண்டின்
கிளையாடு நின்றிருக் கேசபா சத்திளெடு
கிளர்சை வலக்கொத் தெழக்
கிடையாத புதுவிருந் தெதிர்கொண்டு தத்தமிற்
கேளீர்க டழீஇக் கொண்டெனத்
தளையாடு கறையடிச் சிறுகட் பெருங்கைத்
தடக்களி றெடுத்து மற்றத்
தவளக் களிற்றிளெடு முட்டவிட் டெட்டுமத
தந்தியும் பந்தடித்து
விளையாடு வையைத் தடந்துறை குடைந்துபுது
வெள்ளநீ ராடியருளே
விடைக்கொடி யவர்க்கொரு கயற்கொடி கொடுத்தகொடி
வெள்ள நீராடி யருளே. 83

வளமையான கைகளிலுள்ள வளைந்த அழகிய சங்க வளைய லோடும் பெருகி மேலெழுந்து விழும் சங்குகள் ஒலிக்கவும் மதர்த்த செவ்வரி பரந்த கண்ணுகிய கயல் மீன்கள் நீண்ட கயல் மீன்களோடும் புரளவும் வண்டின் கூட்டம் தேனையுண்டு விளை யாடுகின்ற உனது அழகிய குழற் கற்றையுடன் விளங்குகின்ற பாசிக்கொத்து மேலெழவும் கிடைத்தற்கரிய புதுவிருந்தினரை எதிர்கொண்டு சென்று உறவினர்கள் தத்தமக்குள்ளே தழுவிக் கொண்டாற்போலத் தளையமைந்த உரல்போன்ற கால்களையும்

சிறிய கண்களையும் பெரிய துதிக்கையையும் உடைய யானை களை அந்த ஐராவதமாகிய வெள்ளை யானையுடன் முட்டும்படி விட்டு எட்டு மதயானைகளையும் பந்தடித்து விளையாடுகின்ற பெரிய வையைத்துறையில் மூழ்கிப் புதுப்பெருக்கில் நீராடி யருளுவாயாக. விடைக் கொடியினராகிய சொக்கேசப் பெரு மானுக்கு ஒப்பற்ற மீனக்கொடியைக் கொடுத்த பூங்கொடி போன்றவளே ! பெருகிய நீரில் ஆடியருளுவாயாக.

நிரைபொங் கிடுஞ்செங்கை வெள்வளை கலிப்பநகை
நிலவுவிரி பவளம் வெளிற
நீலக் கருங்குவளை செங்குவளை பூப்பவற
னெறி குழற் கற்றை சரியத்
திரைபொங்கு தண்ணந் துறைக்குடைந் தாடுவ
செழுந்தரங் கக்கங் கைநுண்
சிறுதிவலை யாப்பொங்கு மானந்த மாக்கட
றிளைத்தாடு கின்ற தேய்ப்பக்
கரைபொங்கு மறிதிரைக் கையாற் றடம்பணைக்
கழனியிற் கன்னியர் முலைக்
களபக் குழம்பைக் கரைத்துவிட் டள்ளற்
கருஞ்சேறு செஞ்சே றதாய்
விரைபொங் கிடத்துங்க வேகவதி பொங்குபுது
வெள்ளநீ ராடி யருளே
விடைக்கொடி யவர்க்கொரு கயற்கொடி கொடுத்தகொடி
வெள்ளநீ ராடி யருளே. 84

செங்கைகளில் அணிந்த வரிசையாய் அமைந்த சங்க வளையல்கள் ஒலிக்கவும் பல்லாகிய நிலவு விரிகின்ற வாய்ப் பவளம் வெளுக்கவும், நீலநிறக் கருங்குவளைப் பூக்கள், செங் குவளைப் பூக்களைப்போல மலரவும் கருமணல் போன்ற நெறிந்த குழற்கற்றை சரியவும் அலைகள் மிகுந்த குளிர்ந்த அழகிய துறையில் படிந்து விளையாடுவது செழுமையாகிய அலைகளை யுடைய கங்கையாறு நுண்ணிய சிறிய திவலையாகும்படி பொங்குகின்ற இன்பப் பெருங்கடலில் படிந்து விளையாடுவதை நிகர்க்கக் கரையிற் பெருகி விழுகின்ற அலைகளாகிய கைகளால்

பெரிய வயற்கால்களில் சிறிய பெண்களது கொங்கைகளில் பூசப்பெற்ற கலவைச் சந்தனச் சேற்றைக் கரைத்துவிட்டுக் குழம்பாகிய கருஞ்சேருனது செஞ்சேருகி மணம் வீசும்படி தூய வேகவதியாகிய வைகையாற்றில் பொங்குகின்ற புதுநீர்ப்பெருக்கில் ஆடியருளுவாயாக, விடைக் கொடியினராகிய சொக்கேசப் பெருமானுக்கு ஒப்பற்ற மீனக்கொடியைக் கொடுத்த பூங்கொடி போன்றவளே! பெருகிய நீரில் ஆடியருளுவாயாக.

[தொடரும்]

---

(முன் 222-ம் பக்கத் தொடர்ச்சி)

ஊகித்து அறியப்பெறுகின்றது; உத்தமசோழன் காலத்தில் கங்கநாடு வரையில் சோழர் ஆட்சி பரவியிருந்தது என்பதே அச்செய்தியாகும். இங்ஙனம் குவளாலத்திலிருந்து, சோணுட்டுக்கு வந்து, தேவாரம் பெற்ற தலத்தில் வதிந்து, சிவத்தொண்டுகள் பல புரிந்து, அந்நாள் சைவர் நெஞ்சுள் அமர்ந்து, இந்நாளில் ஆய்வாளர் சிந்தைக்கு விருந்தாய் விளங்கும் அம்பலவன் பழுவூர்நக்கனின் பெயரும் பீடும் நீடுவாழ்க! (இவ்வூர் கல்லெழுத்துக்களுட் சிலவற்றைத் தமிழ்ப்பொழில் துணர் 7, பக்கம் 296 - 301லும், திருக்கோயிலிலும் காண்க).

---



பழமுதிர்சோலை
வெற்றிவேல் முருகன் கோயில்

# பழமுதிர்சோலை வரலாறு

ஆசிரியர்

திரு. கி. பழநியப்பன் அவர்கள்

---

"எழுமுதி ரைப்புனத்து இறைவி முன்புதன்
கிழமுதிர் இளநலங் கிடைப்ப முன்னவன்
மழமுதிர் களிறென வருதல் வேண்டிய
பழமுதிர் சோலையம் பகவற் போற்றுவாம். (கந்தபுராணம்)

பாண்டிய நாட்டின் தலைநகரான மதுரை மாநகருக்கு வடக்கே பன்னிரண்டு கல் தொலைவில் பசுமையான உயர்ந்து ஓங்கிய மலைத்தொடர் ஒன்றுளது. சோலைகள் நிறைந்த அம் மலைக் கூட்டத்தின் ஒரு பகுதி பழமுதிர்சோலை மலை யென்றும் மற்றொரு பகுதி திருமாலிருஞ் சோலைமலை யென்றும் பண்டு தொட்டு வழங்கி வருகின்றன. திருமாலிருஞ் சோலைமலையைத் திருமால் இருப்பிடமாகக் கொண்டும், பழமுதிர் சோலைமலையைத் திருமுருகன் இருப்பிடமாகக் கொண்டும் உலகம் உய்ய அருள் பாலித்து வருகின்றனர். இச்செய்தியை வேப்பத்தூர் சங்கப் புலவர்கள் இயற்றிய 'அழகர் கலம்பகம்' என்னும் அருமை நூலில் அழகாய் விளக்கியுள்ளனர்.

"அஞ்சார லும்மணிநீ ராறுங் கிடைக்கரிய
மஞ்சீர மாரு வனகிரியே — பஞ்சவர்தம்
பங்கங் களைந்தான் பனிரண்டு கண்ணொருவர்
பங்கங் களைந்தான் பதி. (அழகர் கலம்பகம்)

"அழகிய மலைப்பக்கங்களிலும், அழகியநீரையுடைய நதியிலும் படிந்து கிடக்கின்ற கருத்த மேகத்தின் குளிர்ச்சி நீங்

---

மதுரை விவேகானந்தா அச்சகம், திரு. கி. பழனியப்பன் அவர்கள் இயற்றிய'பழமுதிர்சோலை வரலாறு' என்ற புஸ்தகத்திலிருந்துஆசிரியரின் அனுமதியுடன் பிரசுரிக்கப்பட்டது.

காத சோலைமலையே, பஞ்ச பாண்டவர்களது அவமானத்தைப் போக்கினவனும், பன்னிரண்டு கண்களையுடைய ஒப்பற்ற ஆறு முகக் கடவுள் பக்கத்தில் பொருந்தப் பெற்றவனுமாகிய அழகரது திருப்பதியாம்'' என்பதே அதன் பொருள்.



அழகர் கோயில்

இவ்விரு சோலைமலைகளில் திருமுருகனின் ஆறுவது படைவிடாகிய பழமுதிர் சோலையின் வரலாற்றை மட்டும் இங்கு நோக்குவோம்.

## இடபமலையின் தோற்றம்

மன்னவனெப்படி மன்னுயிரப்படி என்ற முதுமொழிக்கிணங்க மதுரையை ஆண்ட அனந்த குணபாண்டியனிடம் தோன்றிய சிவபக்தி பாண்டிய நாட்டு மக்களிடம் பெருகியது. இதைக்கண்டு சமணர்கள் சினங்கொண்டு பாண்டியனைக் கொல்ல வகை தேடினர். வேள்விக் கூடம் ஒன்று அமைத்து எண்ணாயிரம் சமண குரவர்கள் வேள்வி நடத்தினர். அவ்வேள்விக் குண்டத்திலிருந்து தோன்றிய பயங்கரப் பாம்பு ஒன்றை மதுரையை அழிக்க விடுத்தனர். அதுகண்ட பாண்டியன் ஆலவாய் அண்ணலின் துணை கொண்டு அப்பாம்பினைக் கொன்றான்.

அதுவே இன்றும் நாகமலையாக மதுரைக்குமேற்புறம் விளங்குகின்றது. முன் இதுபோன்று சமணர்கள் அனுப்பிய கொடிய யானையும் சோமசுந்தரப் பெருமானால் மலையாக்கப்பட்டு மதுரைக்குக் கிழக்கே யானைமலையாக இன்றும் விளங்குகின்றது. இவ்வாறு இருமுறையும் தோல்வியுற்ற சமணர்கள் "இனியாது செய்வோம்?" என்று எண்ணி, "சிவநெறியைச் சார்ந்தோர் பசுவிற்கு ஊறு செய்யார்கள்; பழிக்கஞ்சுவர்; ஆகவே ஒரு மாயப்பசுவை விடுப்போம்" என்று அதற்கான வேள்வியொன்றைச் செய்தனர். அவ்வேள்வியில் தோன்றிய மாயப் பசுவினை மதுரைத் திருநகரை அழிக்க விடுத்தனர். அப்பசு தன் கொம்புகளினால் மேகங்களைக் குத்தி மேலே கோத்துக் கொண்டு ஆதி சேடன் முடியும், மேருமலையும் புழுதிபட அடி பெயர்த்து வைத்தது.

"மாடமலி மாளிகையி லாடுகொடி மானக்
கோடுகளி னேடுமுகில் குத்திமிசை கோத்துச்
சேடன்முடி யுங்கதிர்கொள் சென்னிவரை யுந்தூள்
ஆடவடி யிட்டுலவை யஞ்சிட வுயிர்த்தே."

(திருவிளையாடல்)

இவ்வாறு கூற்றுவன் வரும் தன்மைபோல அப்பசு மதுரையை நோக்கி வெற்றிகொண்டு அழிக்க வந்து கொண்டிருந்தது. அதனையறிந்த பாண்டியன் "பசுவைக் கொல்வது பாவமாகுமே! என் செய்வது?" என்று ஏங்கினான். சோமசுந்தரப்பெருமானின் திருக்கோயிலை அடைந்தான்; "நாதனே! இது முறையோ என் செய்வேன்?" என்று முறையிட்டான்.

"நாதமுறை யோபொதுவின் மாறிநட மாடும்
பாதமுறை யோபலவு யிர்க்குமறி விக்கும்
போதமுறை யோபுனித பூரண புராண
வேதமுறை யோவென விளித்து முறையிட்டார்."

(திருவிளையாடல்)

அதுகேட்ட பெருமான் பாண்டியன்பால் திருவருள் நோக்கினைச் செலுத்திக் கருணை புரிந்தார். இடப நந்தியை

அழைத்துச் "சமணர்கள் விடுத்த மாயப் பசுவை வென்று வருக!" என்று கூறி அனுப்பினர்.

இடபநந்தி கூற்றுவனும் அஞ்சும் வண்ணம் சினந்து எழுந்தது, "நெற்றியில் பட்டம் விளங்க," கொம்பில் செம் மணிப் பூண் பிறைச் சந்திரனைக் கேது என்னும் பாம்பு சுற்றிக் கிடந்தாற் போலத் திகழ்ந்தது. முதுகில் பொற்கவசம் கதிர வனைப் போல் விளங்கியது. கொம்பிலே கட்டப் பெற்ற கவரிக் குஞ்சம் பிறைமதிக் கதிர்போல் தொங்கியது. நெற்றியில் முத்தாலாகிய முகவட்டுப் பொலிந்து விளங்கியது; பின்ன லாகிய மாட்டுச் சதங்கைமாலை கல்லென்று வாய்விட்டு ஆர்த் தது; பாம்பு நாவினை அசைத்தல் போலக் கழுத்தில் வீரமணி நா அசைந்து ஒலித்தது. நான்கு கால்களிலும் தண்டையும் சிறு சதங்கையும் அரசிலை வடிவாகச் செய்த மாலையும் சிலம்பும் ஒன்று சேர்ந்து ஒலித்தன. (இன்றும் திருநாட்காலங்களில் "அழகர்மாடு" என்று கொண்டு வரப்படும் காளைகள் இத்தனை அலங்காரங்களுடன் விளங்குவதைக் காணலாம்.)

"நெற்றித் தனியோடை நிமிர்ந்து மறிந்த கோட்டிற்
பற்றிச் சுடர்செம் மணிப்பூண் பிறை பைய நாகஞ்
சுற்றிக் கிடந்தா லெனத்தோன்ற வெள்ளாழி யீன்ற
கற்றைக் கதிர்போற் பருமம்புறங் கௌவி மின்ன
கோட்டுப் பிறைகால் குளிர்வெண்கதிர்க் கற்றைபோலச்
சூட்டுக் கவரித் தொடைத் தொங்கலு நெற்றி முன்னுப்
பூட்டுத் தரள முகவட்டும் பொலியப் பின்னல்
மாட்டுச் சதங்கைத் தொடைகல்லென வாய்விட்டார்ப்ப
பணிநா வசைக்கும் படியென்னக் கழுத்தில் வீர
மணிநா வசைப்ப நகைமுத்தின் வகுத்த தண்டை
பிணிநாண் சிறுகிங் கிணிப்பல மாலைத் தொங்கல்
அணிநா ணலம்பச் சிலம்பார்ப்ப வடிக ளுன்கும்."

(*திருவிளையாடல்*)

இவ்வாறு தோன்றிய வெள்ளிய இடபமானது வெள்ளிமலை யொன்று கால்பெற்று நடந்தாற் போல விரைந்து சென்று கண் ணின்றும் தீயினைச் சிந்த மாயப்பசுவைத் துரத்தி முட்டி

நாலாபக்கமும் தூக்கி எறிந்து போர் விளையாடலைப் புரிந்தது. சமணர்கள் எண்ணியபடிப் பசுவைக் கொல்லாது இடபநந்தி தனது பேரழகைக் காட்டிப் பசுவை வென்றது. இடபத்தின் அழகைக் கண்டு மாயப்பசு இச்சை கொண்டு காமம் மிகுந்து உயிரோடு வீரியத்தை விட்டுக் கீழே விழுந்தது. அங்கு அதன் உடல் மலைவடிவமாயிற்று. அதைக்கண்ட மக்கள் மகிழ்ச்சி வெள்ளத்தில் மூழ்கினர். மன்னனின் திண்ணிய தோள்கள் பூரித்தன. சமணர்கள் நாணி ஓடினர். உலகோர் அறியுஞ் சான்ருக இடபநந்தி தனது தூல உடலை இடபமலையாக விளங்க நிறுத்தி விட்டுச் சூக்கும சரீரத்தோடு ஆலவாய் அண்ணல் கோயில் அடைந்தது. அவ்விடபமலையே இன்று 'விருஷபாத்திரி' என்று அழகர் கோயில் மான்மியத்திலும் திருமாலிருஞ்சோலை மலை, பழமுதிர்சோலைமலை, சோலைமலை, அழகர் மலை என்று பலவாறு உலக வழக்கினும் வழங்கப்படுகிறது.

### இடபமலையின் சிறப்பு :

இடபமலையின் அமைப்பும் சிறப்பும் வாமன புராணத்தில் கூறப் பட்டுள்ளமை சற்று நோக்கத்தகும். "இப்பெருஞ்சயிலம் இடபத்தைப் போன்றும், பசுவைப் போன்றும் இருப்பதால் அமரர், கருடர், காந்தருவர், கின்னரர், கிம்புருடர், சித்தர், வித்தியாதரர், முனிவர், மனிதருட் சிறந்தோர் முதலிய யாவரும் 'விருஷபாத்திரி' என விருப்போடு திருப்பெயரிட்டுக் கொண்டாடினுர்கள். "மெச்சத் தக்க அழகு வாய்ந்த இப்பருவதத்தின் மேல் நீங்காதிருக்கும் மதகரிகளும், பாங்காயதற்குச் சமீபத்திலுலாவும் மேகங்களும் ஒன்றுக்கொன்று வேற்றுமை தோன்ருதிருத்தலால், தந்தியினங்கள் அம்மஞ்சுத் திரள்களைத் தம்மினமெனச் சிந்தித்து அவற்ருேடு சேர்வதற்கு ஓடியோடி இனத்தைக் காணுது மருட்சியடைந்து நிற்கும். இலட்சக் கணக்காயுள்ள வரையாடுகள் தம்மிச்சையாகவே அச்சமில்லாமற் குதிக்கும் போது அவற்றின் பாதங்களால் எற்றுண்டு குதிக்கும் பச்சை ரத்தினங்களின் மிச்சமாகிய வொளியினுல் அம்மறியினங்கள் பச்சைக் குதிரைகள் போலத் தோன்றும். அங்கம் பெருத்த மலைப்பாம்பின் சருமங்கள் புங்கர் வாழ் நகரின் துங்கக் கொடிகள் போல அங்கங்கே தொங்கிக் கொண்டிருக்கும். தவறிய கவரிமான் மயிர்த் தொகு

திகள் அருவிநீர் பாய்வது போல் அழகுபெற வரிசையாகத் தோன்றும். முற்றிய மூங்கிலுதிர்த்த முத்துக்கள் சிற்றிடைச் சிங்கத்தாற் கொலையுண்ட அத்தியினுடைய இரத்தப் பெருக்கில் தோய்ந்து கூட்டம் கூட்டமாய்க் கிடப்பதானது பத்தினிப் பெண்களின் உத்தம மார்பிற் சித்திரக் குங்குமத்திற்றோய்ந்த முத்து மாலைகளைப் போன்று விளங்கின. செங்கழுநீர் அலர் பொங்கி மேற்றிகழ எங்கும் பரவும் துங்கப்புனல் சேர் அருவிப் பெருக்கானது சங்கரன் முடிமேல் மங்காதிருக்கும் கங்கை நீர் வந்தது போலிருக்கும்.''

## பழமுதிர்சோலை

இத்துணைப்பெருமை வாய்ந்த இடபமலையிலுள்ள பழமுதிர் சோலையை ஆசிரியர் நக்கீரனார் திருமுருகாற்றுப் படையில் படம் பிடித்துக் காட்டுகின்றார்: துணியினால் ஆன பலகொடிகள் காற்றில் ஒன்று சேர்ந்து அசைந்து கொண்டிருப்பது போல் அருவிகள் விழ்ந்து கொண்டிருந்தன. அவைகள் அகில் மரங் களையும் சந்தன மரங்களையும் உருட்டிக் கொண்டும், சிறு மூங் கில்களின் வேரைப் பிளந்து கொண்டும். விண்ணைத் தொடு கின்ற மலைகளின் உச்சியிலுள்ள ஞாயிறு மண்டலத்தை ஒத்த தேன்கூடுகளை அழித்துக் கொண்டும் வந்தன. மேலும் நல்ல பலாப் பழங்களின் சுளைகளும் சுரபுன்னை மலர்களும் அவ்வருவி களில் உதிர்ந்து நீரில் கலந்து வந்தன. யானைகளின் தந்தங்களை இழுத்துக் கொண்டு நல்ல பொன்னும் மணியும் விளங்கும்படிக் குதித்து வந்தன. பொன்னின் பொடிகளைக் கொழித்துக் கொண்டு வந்தன. வாழை மரங்களை அடியோடு ஒடித்துக் கொண்டும், வெள்ளம் மோதுவதால் உதிரும் இளநீர்க் குலைகளை இழுத்துக்கொண்டும், மிளகுக் கொடிகளின் கரிய கொத்துக்களைச் சாய்த்துக்கொண்டும் வந்தன. கருங்குரங்கு கள் நடுங்கும் படியும் யானைகள் தாங்க முடியாதபடியும் குளிர் வீசின. மயில்களும் கோழிகளும் பயந்து ஓட ஆண் பன்றி களும் கரடிகளும் மாடுகளும் முழக்கம் செய்ய மலையுச்சி யினின்று இழும் என்னும் ஓசையுடன் குதிக்கும் அருவியை யுடையது பழமுதிர்சோலை.''

திருப்பரங்குன்றில் தெய்வயானையுடன் வீற்றிருக்கும் முருகப்பெருமான் இப்பழமுதிர் சோலைமலையில் வள்ளி தெய்வ யானையுடன் வீற்றிருக்கும் காட்சியையும் இத்தலத்தின் சிறப் பையும் அருணகிரிநாத சுவாமிகள் திருப்புகழில் பல பாடல் களின் மூலம் விளக்குகின்றார்:

திருமலிவான (செல்வம் மிகுந்த) சோலைமலை, பிட்டுக்கு மண் சுமந்த சொக்கநாதப்பெருமான் வீற்றிருக்கும் மதுரைக்கு அருகிலுள்ளது. இது காசி, இராமேசுவரம், இரத்னகிரி, திருச் செங்கோடு, திருவாரூர், வேலூர், தேவூர், காஞ்சீபுரம், மதுரை, திருப்பறியல், திருவானைக்கா, மூதூர், திருவண்ணாமலை, திருத் தணிகை, திருச்செந்தூர், நாகப்பட்டினம், சீர்காழி, வேளூர், பழநிமலை, திருக்குறுக்கை, திருநாவலூர், திருவெண்ணெய் நல்லூர் என்னும் தலங்களிலும் சிறந்து விளங்குவதாகும். முருகனுக்குப் பிரியமான இடம் இதுவே. முனிவர்களும் தேவர் களும் ஞானம்பெற்ற தூய்மையான இத்தலத்தில் முருகப் பெருமான் மயிலின்மேல் ஏறி வந்து வள்ளி தெய்வயானையுடன் வீற்றிருக்கின்றார். சூரனையும் அவன் சுற்றத்தாரையும் அழித்து வேலாயுதத்தைத் திருக்கையில் ஏந்தி சோலைமலையில் எழுந் தருளி அருள்பாலிக்கின்றார்.'' இவ்வாறு அருட்கவி அருணகிரி சுவாமிகள் அருளியுள்ளார்கள். (இதனைக் குறிக்கும் திருப்புகழ்ப் பாடல்களை இந்நூலின் பிற்சேர்க்கையில் காண்க.)

## சிலம்பாறு

சோலைமலையிலுள்ள சிலம்பாறு (நூபுரகங்கை) திருமுருகன் பாதசரத்திலிருந்து தோன்றிய வரலாறு வடமொழிக் கந்த புராணம் பிரமசங்கிதையில் கூறப்பட்டுள்ளது; "........இடப கிரியில் முருகக் கடவுளின் பாதசரத்திலிருந்து ஒரு நதி யுண்டாகி இருக்கிறது அதற்கு நூபுர (சிலம்பு) கங்கை யென்னும் பெயர் உலகத்திலே பெரிதும் வழங்கப்படுகிறது. அம்மலையின் கீழ்ப் பிரதேசத்தின் அருகே விஷ்ணுமூர்த்தி பரம சுவாமி என்னும் பெயருடன் பிரசித்தியோடு வசித்து, அப் பருவதத்தில் அமர்ந்தருளும் முருகக் கடவுளை இருதயத்திலே தியானித்துக் கொண்டிருக்கின்றனர்" (அழகர் கோவிலிலுள்ள மூலவர் இன்றும் பரமசுவாமி என்றே வழங்கப்படுகிறார்).

**நக்கீரர்**

மதுரைக் கணக்காயனுர் மகனுர் நக்கீரனுர் செந்தமிழ்ப் புலவர்களுள் மிகச் சிறப்புடையர். ஒரு சமயம் தருமி என்னும் ஓர் அந்தணன் பொருட்டுச் சோமசுந்தரப்பெருமான் பாடி யருளிய "கொங்குதேர் வாழ்க்கை" என்னும் செய்யுள் பொருட் குற்றமுடைத்தென்று நக்கீரனுர் வாதாடினுர். இறைவனுர் வெகுண்டு நெற்றிக் கண்ணைத்திறந்து காட்டித் தாம் யாரென்று அறிவித்தனர். அதற்கும் அஞ்சாத நக்கீரனுர் "நெற்றிக்கண் காட்டினும் குற்றம் குற்றமே" என்ருர். எனினும் இறைவனுரின் நெற்றிக்கண் வெப்பத்தைத் தாங்கஇயலாது பொற்ருமரைக் குளத்தில் அழுந்தினுர். (இதன் விரிவைத் திரு விளையாடல் புராணத்திற் காண்க) அவ்வாறு துன்புற்ற அவரை மீட்டு, மேலும் இலக்கண ஆராய்ச்சி செய்துவர இறைவன் கட்டளையிட்டார்.

அக்கட்டளையைத் தலைமேற்கொண்டு நக்கீரனுர் பழமுதிர் சோலையடைந்து ஆங்கு வீற்றிருக்கும் வெற்றிவேல் முருகனை வணங்கித் தமிழ் இலக்கணம் கூறவேண்டினுர். 'வேண்டின வேண்டியாங்கருளும்' முருகப் பெருமானும் அவ்வாறே கீரனுர் விருப்பத்தை நிறைவேற்றிப்பின் "உலகம் உவப்ப" என்றுஅடி எடுத்துக் கொடுத்துத் தாம் விருப்புடன் எழுந்தருளியுள்ள திருப்பதிகளின் சிறப்பைக்கூறி உலகோர்க்கு வழிகாட்டிப் பாடக் கட்டளையிட்டார். கீரனுரும் அளவிலா மகிழ்ச்சியுற்று "உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு" என்று தொடங்கிப் "பழமுதிர்சோலை மலைகிழவோனே" என்று முடித்து முன் னூற்றுப் பதினேழு அடிகளில் திருமுருகாற்றுப் படையைப் பாடியருளினுர். இவ்வாறு முருகப் பெருமான் அடியெடுத்துக் கொடுத்ததை 'க்ஷேத்திரக் கோவைப் பிள்ளைத் தமிழும்" அருண கிரியார் 'திருப்புகழும்' விளக்கமாகக் கூறுகின்றன:

"புவியில் நக்கீரரையும் புகழ்கொண்ட
அருணகிரி நாதரையும்
கவிசொல் என்றேஅடி எடுத்துக் கொடுத்தவர்
கனிவாயின் முத்தம் அருளே"

(க்ஷேத்திரக்கோவைப் பிள்ளைத் தமிழ்)

"வளவாய்மை சொற்பிர பந்தமுளகீரனுக்கு கந்து
மலர் வாயி லக்கணங்க ளியல் போதி
அடிமோனை சொற்கிணங்க வுலகாமு வப்ப என்று
னருளா லளிக்கு கந்த பெரியோனே—
அடியேனு ரைத்த புன்சொ லதுமீது நித்தமுந்த
னருளேத ழைத்து கந்து வரவேணும்"
(திருப்புகழ்)

இவ்வாறு திருமுருகன் அடியெடுத்துக் கொடுத்த திருமுருகாற்றுப் படையை வேதமாகவே அருளாளர்கள் கருதினர். "கீதமொழி கூட்டி வேதமொழி சூட்டு கீரர்" என்ற அருணகிரியார் வாக்கே இதற்குச் சான்றாகும். மேலும் ஒரு சமயம் திருப்பரங்குன்றத்தே உறையுமொரு பூதம் நக்கீரரையும் மற்றும் 999 சிவனடியார்களையும் ஒரு குகையில் சிறையிட்டு வைத்ததும், அச்சிறையினின்றும் தப்புவதற்குக் கீரனார் இத் திருமுருகாற்றுப்படையைப் பாடி முருகன் அருளால் விடுதலை பெற்ற வரலாற்றையும் திருப்பரங்குன்றத்தலபுராணம் விரிவாகக் கூறுகின்றது.

இன்றும் நாடோறும் திருமுருகாற்றுப்படையை ஓதி, திருமுருகனின் திருவருளால் வேண்டுவ வேண்டியாங்கு பல்லோர் எய்தி வருகின்றனர்.

"நக்கீரர் தாமுரைத்த நன்முருகாற் றுப்படையைத்
தற்கோல நாடோறுஞ் சாற்றினால் — முற்கோல
மாமுருகன் வந்து மனக்கவலை தீர்த்தருளித்
தானினைந்த எல்லாந் தரும்."

"ஒருமுரு காவென்றன் உள்ளங்குளிர உவந்துடனே
வருமுரு காவென்று வாய்வெரு வாநிற்பக் கையிங்ஙனே
தருமுரு காவென்று தான்புலம் பாநிற்பத் தையன்முன்னே
திருமுரு காற்றுப் படையுட னேவருஞ் சேவகனே.

---

பழமுதிர் சோலை வெற்றிவேல்
முருகன் திருவடி சரணம்

---

உ

சிவமயம்

பாலருவாயர் துணை

# அருணந்தி முனிவர் அருஞ்செயல் மாலை

தேவகோட்டை, "செட்டிநாடு" இதழாசிரியர்

"தருமபுர ஆதீன வித்துவான, திருவண்ணாமலை ஆதீன விரிவுரையரசு, சித்தாந்தப் புலவர்மாமணி, பாலகவி"

வயிநாகரம், திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள் இயற்றியது.



கடல்சூ ழுலகிற் சிவநெறியுங் கன்னித் தமிழுஞ் செழிப் பதற்குக் கண்ணார் நெற்றிப் பரம்பொருளின் கருணைத் திறத் தாற் காசினியிற், படர்பே ரருளு முயரறிவும் பண்பா ருளமும் படைத்துவந்தோர் பலரா லிவரு ளாலவாயிற் பரம னருளா லரும்பியொளிச், சுடராய் மதுரை வளருமெழிற் றேரைகை யருளான் மலர்வுற்றுச் சோதிக் கூத்தன் வேளூரன் றூய வருளாற் காய்த்துமுற்றி. யடலே றமருங் கொடியண்ண லான மாசி லா மணியா ரருளாற் பழுத்துப் பயனுதவு மடிகள் குமர குருபரர் போல் 1

அவரைத் தொடர்ந்து காசிமடத் ததிப ரான முனிவரர்போ லன்பு மறமு மருள்பொருளு மமுதத் தமிழுஞ் சிவமணமுந், தவரு தெவணும் வளரவந்த சாமி நாத முனியினைப்போற் றகுதி கால மிடமறிந்து தக்க வறங்கள் பலபுரியுந், துவரா ருடை மெய்த் துறவிநெஞ்சாற் சொல்லாற் செயலாற் றனக்கிணையாச் சொல்ல வொருவ ரில்லாது துலங்குந் தூய வருணந்தித், தவர் போ லறங்கள் புரிந்தவரார்? தகவா ரெங்க ளருணந்தித் தம்பி ரானு ரருஞ்செயல்கள் சாற்றக் கேண்மின் தாரணியீர்! 2

அண்ணா மலைப்பல் கலைக்கழகத் தார்ந்த சித்திச் சொற் பொழிவிற் காகும் வெண்பொற் காசுபதி னையா யிரந்தந் தருள் புரிந்தார், தண்ணார் பொழில்சூழ் கொட்டையூர் தனிலார் கல் விச் சாலைக்குத் தகவிற் பதினே ராயிரத்திற் சார்ந்த வைநூ ரும்வஞ்சி, மண்ணாள் திருவாங் கூர்மன்னர் மகிழ்தே வாரப் பரிசுடனே வளமார் சேர மான்பெருமாண் மாணுந் தேவா ரப்பரி

சிங், கெண்ணூர் பதினு யிரங்காழி யிலகுங் கமலை திருவையா றின்பப் பனசை யினின்மூவ ரேற்றத் தேவா ரப்பரிசாய் 3

கொடுக்கப் பதினு யிரங்காசி கூடி யொளிர்பல் கலைக்கழ கங் குலவுஞ் சைவ சித்தாந்தங் குறிக்கு மாசா னியமிக்க, வெடுக்கு மறுப தாயிரமற் றிசைசே ரண்ணு மலைக்கழகத் தில குஞ் சைவ சித்தாந்தத் தினிய வுதவிச் சம்பளத்திற், கடுக்கு முப்ப தாயிரஞ்சீ ராரும் பனசைக் கல்லூரிக் கன்பா யொன்றோ டரையிலக்க மரிய விசைச்செந் தமிழ்க்கலைக்கு, விடுக்குந் தொகையோ ரிலக்கமிறை விளங்கும் பனசைக் கால்நடைகள் மேவு நோய்தீர் விடுதியுடன் விண்ணூர் குடந்தைக் கல்லூரி 4

உதவிச் சம்ப ளத்தினுக்கிங் குற்ற விருப தாயிரஞ்சீ ரோங்குங் காசி யிராமேசத் துபருங் குமர குருபரர்நா, ளதனி லன்ன தானத்திற் கான விருப தாயிரநள் ளாற்றிற் சிம்ம மூலத்தி லன்ன தானஞ் செய்வதனுக், கிதமா மூவா யிரங்காசி யினின்மார் கழியிற் குமரகுரு வின்பே ரன்ன தானத்திற் கேற்ற பதினே ழாயிரந்தூ, மதிமான் பனசைக் கல்லூரி வளர்மா ணுக்க ருணவுநிதி வழக்க மிலக்கம் பனசையினின் மருந்துச் சாலை நிறுவுதற்கே 5

அறுபத் தாரு யிரம்பனசை யாற்றிற் பெருமைக் கேதார அணிசேர் கட்ட மமைப்பதனுக் கான விருபத் தொன்பதுநூ, றுறுமத் துறையி லுண்மையதே யுற்ற வரிச்சந் திரகட்ட முண்டு செயமூ வாயிரத்தோ டொருமுந் நூறு நாட்பொழுது, தொறுமற் றதனைக் குடந்தையினிற் றுலக்கு மணிக்கூண் டினுக்களித்த தொகையா மையைந் தாயிரஞ்சீர் துவன்றுந் தஞ்சை யினிற்காசந், தெறுமத் தருமச் சாலைக்குச் சேர்ந்த விருபத் தெட்டுடனே திகழு மரையா யிரம்பெருமை சேரும் வைகுண் டப்பதியில். 6

(தொடரும்)

---

# பவானி சங்கமேசுவரர்

திரு. தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் அவர்கள்

எனது நண்பர் ஒருவர் நல்ல தமிழ்ப் புலமை உடையவர், கவி பாடுவதில் சமர்த்தர். எந்தப் பொருளைப் பற்றி, எப்போது, என்ன கவி பாட வேண்டும் என்றாலும் பாடக்கூடியவர் அவர். அவரை அழைத்துக்கொண்டு ஒரு பிரபல அறிஞரைக் காணச் சென்றேன் நான் ஒருநாள். அறிஞரிடம் நண்பரை அறிமுகப் படுத்தி அவர் கவி பாடும் திறமையைப் பற்றி ஒரு குட்டிப் பிரசங்கமே செய்தேன். தம் புகழ் கேட்டு நண்பர் நாணிக் கோணித் தலை கவிழ்ந்தார். நான் சொன்னதை யெல்லாம் பொறுமையோடு கேட்டுக் கொண்டிருந்த அறிஞர், கடைசியில் கவிஞரைப் பார்த்து "காகம் கா–கம்பி கம்பி–கம்" என்பதைக் கடையடியாக வைத்து ஒரு வெண்பாப் பாடும் பார்ப்போம்" என்றார். நண்பர் பரபர வென்று விழித்தார் கொஞ்ச நேரம்.

அவரது சங்கடத்தை உணர்ந்த நான் அவர் காதில் மெது வாக, "பயப்படாதீர்கள். கடையடியைச் சொல்வதில்தான் அத்தனை படாடோபம். பிரித்துச் சொன்னால் 'காகம் காகம், பிகம் பிகம்' அவ்வளவுதான். பிகம் என்றால் வடமொழியில் குயில் என்று அர்த்தம்" என்று சொன்னேன். இதைச் சொன்னதும் கவிஞர் உத்சாகமாகப் பாட ஆரம்பித்தார். அவர் அன்று பாடிய பாட்டு இதுதான்.

காகம் குயில் இரண்டும் கார்நிறத்தால் தம்முள் ஒப்பே
ஆகும் எனினும் அணிவசந்தம்—மோகம் செய்
வேகமுறும் காலத்து வேறு வேறும் அவைதாம்
காகம் காகம், பிகம் பிகம்

---

*12—3—'61 "கல்கி" இதழில் 77 — 79-ம் பக்கங்களில் வெளி வந்துள்ள இக்கட்டுரை, ஆசிரியர் அனுமதியுடன் பிரசுரிக்கப்பட்டது.*

இந்தப் பாட்டைக் கேட்ட அறிஞர் 'சபாஷ்' போட்டு நண்பரை மிகவும் பாராட்டினர். அறிஞர் தமிழ் சமஸ்கிருதம் இரண்டிலும் பாண்டித்தியம் உடையவர். தமிழ்ப் புலமை மாத்திரமே உடைய கவிஞர், அருமையான சமஸ்கிருத சுலோகத்தின் பொருளையே நல்ல கவிதையில் கூறியதைக் கேட்டு அதிசயித்து நின்றார். அவர் சொன்னர்: 'வடமொழியும் தென் மொழியும் இரண்டு ஜீவநதிகள். இரண்டும் தனித்தனியாகப் பாய்ந்து பரவும்போது அதில் அதிக வேகமோ, சாந்நித்தியமோ இருப்பதில்லை. இரண்டும் இணைந்து கலந்து விட்டால், அப்படிக் கலக்கும் இடத்துக்குத்தான் பெருமை. தெரியாமலா சொல்லியிருக்கிறார்கள், கங்கையும் யமுனையும் கலக்கும் 'அந்தப் பிரயாகையில் சென்று முழுகினல் எவ்வளவோ புண்ணியம் உண்டு' என்று? இரண்டு கலாசாரங்கள் ஒன்றுடன் ஒன்று கலப்பதால் ஏற்படும் மொழி வளர்ச்சி, பெருமைகளைத்தான் அவர் குறிப்பிட்டார். நானும் சொன்னேன்: 'என்ன? உதாரணத்துக்கு அத்தனை தொலைதூரம் சென்று விட்டீர்கள்? நம் தமிழ் நாட்டிலேயே ஒரு பிரயாகை இருக்கிறதே, தக்ஷிணப் பிரயாகை என்ற பெயரோடு. காவிரியும் பவானியும் கலக்கும் அந்தப் பவானி முக்கூடலில், அந்தச் சங்கமத்தில் சென்று முங்கி எழுந்தால் எவ்வளவு புண்ணியம்? கங்கையும் யமுனையும் கலக்கும் இடத்திலே சரஸ்வதி நதி அந்தர் வாகினியாகக் கலப்பது போலவே, இங்கே காவிரியும் பவானியும் கூடுதுறையிலே அமுத நதியும் அந்தர் வாகினியாகக் கலந்து இதனையும் ஒரு நல்ல திரிவேணி சங்கமம் ஆக்கிவிடுகிறது. அந்தக் கூடுதுறையில்தானே சங்கமேசுவரராம் இறைவன் வேறே கோயில் கொண்டிருக்கிறன்' என்று. இதையெல்லாம் கேட்ட அறிஞர் கவிஞரோடு சேர்த்து என்னையுமே பாராட்டினர். இந்தப் பாராட்டுதல்களுக்கு எல்லாம் காரணமாயிருந்த பவானி முக்கூடலுக்கே, அங்குள்ள சங்கமேசுவரர் கோயிலுக்கே செல்கிறோம் நாம் இன்று.

பவானி செல்வதற்கு, ரயிலில் செல்பவர்கள் ஈரோடு ஜங்ஷனில் இறங்க வேண்டும். அங்கிருந்து பதினேரு மைல் நேர் வடக்கே பஸ்ஸிலோ காரிலோ, இல்லை, குதிரை பூட்டிய

ஜட்கா வண்டியிலோ செல்ல வேண்டும். சொந்தக் கார் வைத்துக்கொண்டு சென்னையிலிருந்து கிளம்புபவர்கள் சேலம் – கோவைப் பெருஞ்சாலை வழியாகவும் வரலாம். சேலம் வழியாக வடக்கே இருந்து வந்தால் காவிரியைக் கடந்து ஊர் வந்து சேரவேணும். கோவையிலிருந்து வடக்கு நோக்கி வந்தால் பவானியாற்றைக் கடந்துதான் ஊர்வந்து சேரவேணும். ஆறுகளைக் கடப்பதற்கு நல்ல பாலங்கள் இருப்பதால் எளிதாகவே வந்து சேரலாம். இனி காவிரியும் பவானியும் கலக்கும் அந்த முக்கூடல் சங்கமத்துறைக்கே வரலாம். அங்குதானே காவிரியின் மேல் கரையில் சங்கமேசுவரர் கோயில் இருக்கிறது? கோயிலுக்கு இரண்டு வாயில்கள். வடக்கு நோக்கிய பிரதான வாயில் வழியாகவே நாம் உள்ளே செல்லலாம். அவ்வாயிலைக் கடந்ததுமே முன் முற்றத்தில் சிறிய கோபுரத்துடன் கூடிய ஒரு தனிக்கோயிலில் விநாயகர் இருப்பார். அவரை வணங்கிவிட்டு மேல் நடக்கலாம். கிழக்கு வாயிலுக்கு எதிரிலேதான் கொடிமரம், பலிபீடம் விளக்கேற்றும் கல்தூண் எல்லாம் இருக்கும். கோயிலுள் போவதன் முன் கிழக்கு வாயில் வழியாகக் கூடுதுறைக்குச் சென்று அங்கு முங்கி முழுகி நம் பாவங்களைக் கழுவிக் கொள்ளலாமே. அங்கெல்லாம் வசதியாக ஸ்நானம் செய்ய நல்ல படித்துறை கட்டி வைத்திருக்கிறார்கள். அதிலும் அமாவாசை கிரகண காலங்களில் அங்கு நீராடுவது சிறப்பு என்றும் தெரிகிறது.

> "காலில் அரவம் இரு சுடரைப் பற்றும் காலத்திலே
> மேலுலகம் பெறுவோர் புனல் மூழ்க விரும்புவது
> கோலம் மிகுந்த பவானியும் பொன்னியும் கூடுதுறை
> வாலிப காசி நண்ணுவூர் பயில் கொங்கு மண்டலமே."

என்பது தானே கொங்கு மண்டல சதகப் பாட்டு?

இதைக் கேட்டவுடனே, இது என்ன இதை நண்ணுவூர் என்று வர்ணிக்கிறார்கள் என்று கேட்கத் தோன்றும். ஆம்! பார்வதியம்மையின் திருப்பெயர்கள் பலவற்றுள் பவானி என்பது ஒன்று. அந்தப் பெயரே நதியின் பெயராகவும், தலத்தின் பெயராகவும் அமைந்திருக்கிறது. மேலும் இத்தலத்

துக்கு வந்து இங்குள்ள முக்கூடலில் முழுகி எழுவோரை யாதொரு தீங்கும் நண்ணுது. ஆதலின் இதனை நண்ணுவூர் என்றும் அழைத்திருக்கின்றனர். இந்த நண்ணுவூரே, திரு நணு என்றும் குறுகி, ஞானசம்பந்தரால் 'வந்தார் மடமந்தி கூத்தாட வார்பொழில் வண்டு பாடச் செந்தேன் தெளி ஒளிரத் தேமாங்கனி உதிர்க்கும் திரு நணு' என்றும் பாடல் பெற்றிருக் கிறது. இன்னும் இந்தத் திரு நணு என்னும் பவானி, சங்ககிரி, நாககிரி (திருச்செங்கோடு) மங்கலகிரி, வேதகிரி, பத்மகிரி என்று ஐந்து சிறு மலைகளுக்கு இடையே இருப்பதால் பஞ்சகிரி மத்தியப் பிரதேசம் எனவும் வழங்குகிறது.

இந்தப் பவானி கூடுதுறையிலே காயத்திரி தீர்த்தம் என்று ஒரு தீர்த்தக் கட்டம் இருக்கிறது. அதனைக் காயத்திரி மடு என்றும் கூறுகிறார்கள். இதன் கரையிலே காயத்திரி லிங்கமும் இருக்கிறது. அமுத லிங்கம் என்று ஒரு லிங்கத் திருவுருவம் வேறே இருக்கிறது. அன்று தேவர்களும் அசுரர் களும் சேர்ந்து பாற்கடலைக் கடைந்து அமுதம் எடுத்திருக் கிறார்கள். அதில் ஒரு சிறுபங்கைப் பராசரமுனிவர் மகா விஷ்ணுவிடம் பெற்றிருக்கிறார். இந்தப் பராசரர் கொண்டு வந்த அமுதத்தைத் தட்டிப் பறிக்க அசுரர்கள் அவரைத் தொடர்ந்திருக்கிறார்கள். அமுதம் அவர்கள் கண்ணில் படா மலிருக்க அதனைப் பராசரர் இந்தக் கூடுதுறையிலே புதைத்து வைத்திருக்கிறார். ஆனால் அப்படிப் புதைக்கப்பட்ட பாண்டத் தோடு கூடிய அமுதமே அங்கு லிங்க உருவாக மாறியிருக் கிறது. இந்த அமுதலிங்கத்தின் அடியில் இருந்துதான் அமுத ஊற்று புறப்பட்டுக் காவிரியோடு கலக்கிறது என்கிறார்கள். இந்த அமுதலிங்கம் அதற்குரிய ஆவுடையாரின் பேரில் இருக் கிறது. எளிதாக எடுக்கவும், திரும்ப வைக்கவும் கூடிய நிலை யில் இருக்கிறது. மகப்பேறு இல்லாதவர்கள் இந்த அமுத லிங்கத்தை எடுத்து இடையில் வைத்துக் கொண்டு அக்கோயிலை வலம் வந்தால் மகப்பேறு அடைவர் என்பது நம்பிக்கை.

கூடுதுறையில் இத்தனையும் பார்த்த பின் இனி கோயிலுள் நுழையலாம். இந்தக் கோயிலைச் சுற்றி ஒருகோட்டை இருந்

திருக்கிறது அந்த நாளில். அந்தக் கோட்டைச் சுவரின் சின்னங்கள் ஆங்காங்கே காணப்படுகின்றன. பெரும் பகுதி இடிந்து தசர்ந்து விட்டது என்று தெரிகிறது. கோயில் பிரா காரத்தைச் சுற்றினுல், அங்கு தல விருட்சமான இலந்தை மரத்தைப் பார்க்கலாம். அது காரணமாக இத்தலம் பதரி ஆசிரமம் என வழங்கப்பட்டிருக்கிறது என்றும் அறியலாம். கோயிலின் நிருத்த மண்டபம், மகா மண்டபம் எல்லாம் கடந்தே கருவறையில் உள்ள சங்கமேசுவரரைத் தரிசிக்க வேணும். இது எல்லாம் சில வருஷங்களுக்கு முன். இப்போது சுவாமி கோயில் பழுதுற்றிருந்ததை இடித்துவிட்டுக் கிட்டத்தட்ட இருபது லட்சம் ரூபாய் செலவில் புதிதாகக் கட்டிக் கொண்டிருக்கிருர்கள். திருப்பணி பூர்த்தியாக இன்னும் இரண்டு ஆண்டுகள் ஆகும் என்கிருர்கள். ஆதலால் சங்கமேசுவரர், அவருடன் இருந்த விநாயகர், தண்டபாணி, ராமநாதர், பர்வதவர்த்தினி, சண்டீசர். பைரவர், பஞ்சலிங்கங்கள், நவக்கிரகங்கள் எல்லோருமே இடம் பெயர்ந்து திருமுறை கழகக்கட்டிடத்தில் இருக்கிருர்கள்.அந்தப் பாலாலயம், (இளங்கோயில்) சென்ருல் எல்லோரையும் ஒருமிக்க எளிதாகவே தரிசித்து விடலாம். இப்போது திருப்பணி நடக்கும் கோயிலுக்கு வடபுறம் அம்மன் கோயில் இருக்கிறது. அம்மை யின் பெயர் வேத நாயகி. அங்கும் நிருத்த மண்டபம், மகா மண்டபம் எல்லாம் இருக்கின்றன. இந்த நிருத்த மண்ட பத்தைக் கட்டியவர் மும்முடிக்கட்டி முதலியின் சகோதரி சின்னம்மாள் என்று அங்குள்ள கல்வெட்டு ஒன்று கூறுகிறது. அந்தக் கல்வெட்டில் அம்மையின் பெயர் பண்ணுர்மொழியாள் என்று குறிக்கப்பட்டிருக்கிறது. இந்த அம்மை கோயிலுக்கும் சுவாமி கோயிலுக்கும் இடையேதான் சுப்பிரமணியருக்கு ஒரு சிறு கோயில் இருக்கிறது. அம்மையை வணங்கிய பின் ஆறு முருகனேயும் சென்று வணங்கி வெளிவரலாம்.

பின்னர் வெளி முற்றத்துக்கு வந்தால், இன்னுமொரு பெரிய கோயில் இருப்பதைப் பார்ப்போம். அது என்ன கோயில் என்று விசாரித்தால் அதுதான் ஆதிகேசவப் பெருமாள் கோயில் என்பார்கள். இது சிறப்புத்தானே. சைவ வைஷ்ணவ வேற்றுமைகளைக் களைந்தெரியவே, பெரிய

தோர் ஈசுவரன் கோயிலிலேயே பெருமாளுக்கும் இடம் கொடுத்திருக்கிறார்கள். ஆம்! அன்று தில்லைச் சிற்றம்பல வன் கோயிலிலே திருச்சித்தரகூடத்துப் பெருமானையும் தரிசித்து வணங்கி யிருக்கிறோமே. இக்கோயிலில் ரங்க மண்டபம் விஸ்தாரமான மண்டபம். ஆதிகேசவப் பெருமாளது துணைவி சௌந்தரவல்லிக்கு ஒரு தனிக் கோயில். ரங்க மண்ட பத்தின் வடபக்கத்திலே தனித்தனிக் கோயிலில் ருக்மிணி சத்ய பாமை சகிதமாக வேணுகோபாலன் வேறே இருக்கிறார். திருமால் சந்நிதிக்கும் தாயார் சந்நிதிக்கும் இடையில் நம்மாழ் வார், ராமானுஜர் எல்லாம். இன்னும் கோயில் கல்தூண்களில் பட்டாபிராமர், கோதண்டராமர், திருப்பணி செய்த பக்தர்களின் சிலைகள்.

இவர்களை யெல்லாம் தரிசித்த பின் வெளியே வருவோம் என்றால் உடன் வருபவர்கள் கிழக்கு மதில் சுவர்ப்பக்கம் நம்மை அழைத்துச் செல்வார்கள். அம்மதில் சுவரில் அம்மை சந்நிதிக்கு நேர் எதிரில் உள்ள மூன்று சிறு துவாரங்களைக் காட்டுவார்கள். அந்தத் துவாரங்கள் எப்படி ஏற்பட்டன என்பதற்கு ஒரு ரசமான கதையையும் கூறுவார்கள். கும்பினியார் இந்தியாவை ஆண்டபொழுது இந்தப் பவானிதான் சேலம், கோயம்புத்தூர் மாவட்டங்களுக்குத் தலைநகராக இருந்தது. 1802-ம் வருஷத்தில் இங்கு கலெக்டராக இருந்தவர் வில்லியம் காரோ என்னும் துரை மகனார். அவர் பத்துப் பன்னிரண்டு வருஷங்கள் இங்கு இருந் திருக்கிறார். அவர், இப்போது பிரயாணிகள் விடுதியாக இருக்கும் பங்களாவிலே தங்கி வாழ்ந்திருக்கிறார். தினசரி இந்தச் சங்கமேசுவரர் கோயிலுக்கு ஆயிரக்கணக்கான மக்கள் வருவதையும் கூடுதுறையில் குளிப்பதையும் கண்டிருக்கிறார். அதோடு வருபவர்கள் வேதநாயகியின் அருளைப் பற்றி அடிக்கடி பேசுவதையும் கேட்டிருக்கிறார். அவருக்கு ஓர் ஆசை இந்த வேதநாயகியைத் தரிசிக்க வேண்டும் என்று. இவரோ பிற மதத்தினர். கோயிலுள் வர அனுமதிக்கப்படமாட்டார். இவரது ஆவலை அறிந்த அந்தத் தாலுகா தாசில்தார் அம்பிகையின் சந்நிதிக்கு நேரே மதிலில் மூன்று சிறு துவாரங்கள் செய்து அவை வழியாக அலங்கரிக்கப்பட்ட அம்பிகையைக் கலெக்டர்

காண வகை செய்திருக்கிருர். அம்பிகையின் வடிவழகைக் கண்டு வழிபாடு செய்திருக்கிருர் கலெக்டர். இப்படியே தினசரி சிறு துளை வழியாக அம்மையைக் கண்டு தரிசித்து வந்திருக்கிருர் காரோ துரை. ஒரு நாள் இரவு தம் பங்களாவில் உறங்கிக் கொண்டிருந்தபோது வேதநாயகியைப்போல் அலங்காரம் செய்துகொண்ட பெண் ஒருத்தி தம்மை வெளியே போகும்படி சொன்னதாகக் கனவு கண்டிருக்கிருர். அப்படியே படுக்கையை விட்டு எழுந்து வெளியேயும் வந்திருக்கிருர். என்ன அதிசயம், இவர் வெளி வந்த சில நிமிஷங்களில், பங்களா கூரையே இடிந்து விழுந்திருக்கிறது. அன்னையின் அருளை வியந்து வாழ்த்திய கலெக்டர், தந்தத்தாலேயே ஒரு கட்டில் செய்து அதனை அம்பிகைக்குத் தம் காணிக்கையாக வழங்கியிருக்கிருர். கட்டிலில் தம் பெயரையும் பொறித்து வைத்திருக்கிருர். இக் கட்டில் காணிக்கையாகக் கொடுக்கப்பட்ட தேதி 11–1–1804 என்று கட்டிலில் இருந்து தெரிகிறது. தென்னுடைய சிவன் எந்நாட்டவர்க்கும் இறைவன் என்ருர் மாணிக்கவாசகர். அப்பாலும் அடிசார்ந்த திருக்கூட்டமும் அடியார் கூட்டத்துடன் சேர்ந்தவர்களே. இந்த முறைப்படி, பிற மதத்தினரையும் தம் அடியவர்களாகச் சேர்த்துக் கொள்ளும் சங்கமேசுவரர் – வேத நாயகியின் பெருமைதான் என்னே? பத்தொன்பதாம் நூற்ருண்டில் நடந்த இந்த சம்பவத்தை முன்னேரே அறிவிப்பார் போல் ஆயிரத்து இருநூறு வருஷங்களுக்கு முன்பே ஞானசம்பந்தர் பாடியிருக்கிருர்.

“வில்லார் வரையாக, மாநாகம்
நாணுக, வேடங் கொண்டு
புல்லார் புரம்மூன்றும் எரித்தார்க்கு
இடம்போலும், புலியும்மானும்
அல்லாத சாதிகளும் அங்கு அழல்
மேல் கைகூப்ப அடியார்கூடி
செல்லா அரு நெறிக்கே செல்ல
அருள் புரியும் திருநணுவே”.

என்பது அவரது தேவாரம். ‘அல்லாத சாதிகள்’ ஜாபிதாவில் காரோ துரையும் சேர்ந்தவர்தானே. இங்குள்ள சங்கமேசுவரர்–

வேதநாயகி தாம் பாடல் பெற்றோர்கள் என்று இல்லை. இங்குள்ள முருகனும் அருணகிரியாரால் பாடப் பெற்றவர்.

"மலைமேவு மாயக் குறமாதின்
மனமேவு வாலக் குமரேசா!
சிலை வேட சேவல் கொடியோனே
திருவானி கூடற் பெருமாளே"!

பவானியே வானி என்று குறுகி நிற்கிறது. இதற்குச் சங்ககால இலக்கியத்திலேயே ஆதாரம் இருக்கிறது. இங்குள்ள கல்வெட்டுகள் அனந்தம். மும்முடிக்கெட்டி முதலியார் பரம்பரையினரே கோயிலின் பெரும் பகுதியைக் கட்டியிருக்கிறார்கள். பதினெட்டாம் நூற்றாண்டில் கிருஷ்ணராய உடையார் தளவாய் தேவராயன் ஒரு மண்டபத்தைக் கட்டியிருக்கிறான். பின்னும் திருப்பணி பல நாராயண கவுண்டர் என்பவர் செய்திருக்கிறார். இன்றும் திருப்பணி நடக்கிறது, சிறப்பாக. திருப்பணியில் தமிழ் மக்கள் பங்குபெற விரைய வேண்டும் என்பதே எனது வேண்டுகோள்.

---

# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY

F. KINGSBURY, B. A. (Madras)

AND

G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

---

[மலர் 12, இதழ் 3-ன் தொடர்ச்சி]

## I

## SAMBANDAR

(Tamil: TIRU JNANA SAMBANDAMURTI SWAMI)

3. பறையும்பழிபாவம்படுதுயரம்பலதீரும்
பிறையும்புனலரவும்படுசடையெம்பெருமானூ
ரறையும்புனல்வருகாவிரியலைசேர்வடகரைமேல்
நிறையும்புனைமடவார்பயில்நெய்த்தானமெனீரே.

One of the first puzzles to a student of Saivism is the way in which each of the numerous shrines seems to be spoken of as if it were Siva's exclusive abode. The broad river marked on English maps as the Cauvery, but in Tamil called the Kaviri, which brings so much blessing to a large part of South India that the respect in which it is held is not difficult to understand, is fringed throughout its length with shrines which are believed to confer the blessings of Siva on all who visit them. One of these is 'Neyttanam,' 'Place of Ghee.'

3. So ye but say Neyttanam is the home
Of our great Lord who wears in His long hair
The crescent moon, the river, and the snake,
Neyttanam where chaste maidens gather fair,
On the north bank of Kaviri's loud stream,
Your vileness, guiltiness, the sin you dread,
Your sorrows many, shall be banished.

---

(to be Continued)

---

Reproduced with the kind permission of Oxford University Press. Calcutta.

(N. B. Copies available for sale at the above Press)

# ஸ்ரீ சொக்கநாதர் திருவருட்பா

**மாணிக்கவாசக அடிகள்**

[மலர் 12 இதழ் 3, பக்கம் 205-இன் தொடர்பு.]

பிறவிப் பெருங்கடலை நீந்திப் பேரின்பக் கரையைச் சார்ந்து, இறவாத இன்ப அன்புருவான நின்திருவடி நிழலை அடையும் பெறலரிய பேற்றை அருள்வார் குருநாதரே அன்றி மற்றெவரும் இலர். அவரால் எய்தும் நன்மைகள் எல்லாம் தரவல்லார் யாரும் இல்லை. எதுவும் இல்லை. வேறு எவற்ருலும் வரும் நலமெல்லாம் குருவருளால் எய்தலாம். குருவருளால் எய்தும் நலங்களை வேறு யாதும் தரமாட்டாது. மணிமந்திரம் ஔடதம் முதலியவற்ருலும் அணிமா மகிமா முதலிய அட்டமா சித்திகளாலும் அடையத்தக்க நலங்களையும் குருவருளால் அடையலாம். குருவருளே சிவஞானத்தை அளிக்கும். அத் திருஞானம் வேறு எதனுலும் கிடைக்காது.

"மந்திரத்தால் மருந்துகளால் வாய்த்த யோகத்தால்
மணிஇரத குளிகையினுல் மற்றும் மற்றும்
தந்திரத்தே சொன்னமுறை செய்ய வேத
சகலகலை ஞானங்கள் திரிகால ஞானம்
அந்தம்இலா அணிமாதி ஞானங்கள் எல்லாம்
அடைந்திடும்; ஆ சான்அருளால் அடிசேர் ஞானம்
வந்திடும்;மற் றென்ருலும் வாரா தாகும்
மற்றவையும் அவனருளால் மருவும் அன்றே."

[சிவஞானசித்தியார்]

இவ்வுண்மையைக் குருவருளால் முத்திபெற்ற அடியார் அருள் வரலாறுகளை நோக்கி உணர்க. இக்கருத்தை உணர்ந்தே 'சனன வாரிதியை அகற்றிடும் குருவே' என்றதன் பொருளை ஆய்தல் வேண்டும்.

விண்ணில் உள்ள தேவதாரு பலவற்றுள்ளும் கற்பகம் பாரிசாதம் முதலியன உதவும் வண்ணம் குருவருளும் வேண்டு வார் வேண்டுவதே ஈயும். அதனை அநுபவம் ஆகக்கண்டவர் தாம் அறிவர். இசைவர். அநுபவம் ஆகக்கண்டவர் ஆதலின், 'தமியனேற்கு உதவும் நல்தருவே' என்றார். தருமையாதீனத்தில் வழிபடப்பெறும் ஸ்ரீ சொக்கநாதர், ஆதிகுருவாகிய சீலஸ்ரீ குரு ஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள் திருக்கையில் மதுரைப் பொற்றாமரைத் திருக்குளத்தில் திருவருளால் வந் தெய்திய திருவருளுருவம் ஆதலின், 'சம்பந்தர் கரத்தில் துலங் கிடும் உருவே' என்று அழைத்து அகம் மகிழ்கின்றார் ஆசிரியர். இவ்வாறே இதில் ஒன்பதாவது திருவிருத்தத்திலும் 'சம்பந்தர் கரத்தில் துலங்கிடும் மணியே' என்று உள்ளமை காணலாம். அதை வழிபடுகின்ற குருமணியின் திருப்பெயர் யாதாயினும் அத்தருமணியை ஞானசம்பந்தராகவே தொழும் வழக்கம் இவ் வாதீனத்திற்கு உரியதாகும். ஆதலால்தான், இப்பொழுது அருளரசு புரியும் கனகாபிஷேக மூர்த்தியாகிய குருமணியை யும் சிலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமா சாரிய சுவாமிகள் அவர்கள் எனத்தொழுதுவரும் புண்ணியம் சைவநன்மக்களுக்கு வாய்த்துளது.

சைவசமய குருவைத் தியாநம் புரியும் மனத்தில் சிவமணம் கமழும். அச்சிவமணம் இதயகமலத்தினது. அக்கமலம் அடிய வர் உள்ளத்தில் இருப்பது. 'கருதுவார் இதயத்துக் கமலம்' என்றும், 'கமலத்து ஊறும் தேன்' என்றும் திருமுறை முழங்கு கின்றது அதைத்தான். அக்கருத்தை உட்கொண்டு, 'தாசர்கள் மனமலர் மருவே' என்றார். தாசர்கள்-தொண்டர்கள். மனமலர்- இதயகமலம். மரு–சிவமணம்.

தருமையின் திருமடாலயத்தின் எதிரில் கீழ்பால் விளங்கும் தீர்த்தம் மிகச்சிறந்தது. ஸ்ரீ சொக்கநாதர்க்குச் செய்யும் அபி டேகம் எல்லாம் வழாது ஏற்றுச் சண்டேசுரர் போல விளங்கு வது அத்தீர்த்தம். அதனால், அதற்குச் 'சண்டதீர்த்தம்' என்று பெயர் வழங்கிற்றுப்போலும். பூசைமடத்து நிர்மாலிய புட்ப மெல்லாம் அத்திருக்குளம் ஆகிய சண்டர் முடியில் பொலிவுறக் காண்டல் இன்றும் உண்டு. இதையும் அத் திருவிருத்தத்தில்

'சண்டவாவி' என்று மீண்டும் குறித்தார் ஆசிரியர். தினந் தோறும் மணிகளை அலைகள் வாரி எறியும் தீர்த்தம் ஆதலின், 'தினமணி வாரி யெறியலை சண்டதீர்த்தம்' என்றார். அத்தீர்த்தம் ஆர் (பொருந்திய) வாழ்வு அளித்தருளும் தருமை. சிகரிசேர் தருமை. தருமைவளர் சொக்கநாதச் செல்வம். அதுவே சிற்சுகோ தயம். சித்-ஞானம். சுகம்-இன்பம். உதயம்-தோற்றம். ஞானு னந்தத் தோற்றம். ஞானத்தில் தோன்றும் ஆநந்தம்.

இவ்வாறு தம் வழிபடுமுதலை அழைத்துத் தமது விண்ணப் பத்தை வெளியிடுகின்றார் ஆசிரியர். அதில் முதலில் அடங் காத அந்தக் கரணத்தையும் அடுத்து அடங்காத இந்திரியங் களையும் பின்னர் அகங்காரமமகாரங்கள் அகலும் வழியில்லாத நிலையையும் உள்ளத்துறு துயரம் ஒழியும் வண்ணம் அருள வேண்டுதலையும் காணலாம்.

அலை ஓய்ந்த போதே தலைமுழ்க வேண்டும் என்று இருந் தால், கடலாட்டு வாய்க்காது. கடலில் அலை அடித்துக் கொண்டே இருக்கும். மக்கள் தலை முழ்கிக் கொண்டே இருக்க வேண்டும். அலை ஓயாது. தலை மூழ்கத் தடையாவது அலை யன்று. உள்ளத்தச்சமே தடை. அருள் பெற்றால்தான் அந்தக் கரணம் நமக்குச் சொந்தக்கரணம் ஆகும் என்று எண்ணுவது அறிவுடைமையாகாது. அந்தக் கரணத்தைத் துயதாக்கிவர வர அருள் வந்து சார்ந்து பெருகிக் கொண்டேயிருக்கும். அந்தக்கரணம் அடங்கினால்தான் ஆண்டவனருளை வழிபடலாம் என்போர் அறிஞர் அல்லர். அருள்வழி நின்று நின்று அந்தக் கரணத்தின் அலைவை வென்றுவரல் வேண்டும்.

'மெய் வாய் கண் மூக்கு செவி' என்னும் ஐம்பொறிகளும் (பஞ்சேந்திரியங்களும்) 'சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம்' என்னும் ஐம்புலன்களையும் நாடிப்புறத்தே சென்று பற்றியும் தம்பால் வந்தாற் பிடித்து விடாதும் உயிர்க்குப் பற்றை வளர்க் கும். புலனடக்கமும் பொறியடக்கமும் உண்டானால் தான் பூஜை புரிவேன் என்பவன், எந்த யுகத்திலும் பூஜையைப் புரியப் புண்ணியம் உறான். பூஜை செய்துவரப் பொறியும் புலனும் அடங்கிவரும். பொறிபுலன்களில் வைக்கும் அன்பு பூஜையில் மாறிவரும் காலத்தில் அவ்விரண்டும் அடங்கி அள

வாகி அமையும். அப்பொழுதுதான் 'யான்' என்னும் 'அகந்தை யும் 'எனது' என்னும் 'மமதை'யும் ஒழியும். சிவனே தலைவன் நாம் அடிமை என்னும் உண்மையுணர்வுண்டாகும். அவ் வுணர்வே பற்றுக்கள் அற்றுத் தொலையும்படி செய்யும்.

'மெய்யுணர்வு இல்லாதவர்க்கு ஐயுணர்வு எய்தியக்கண் ணும் பயம் இன்றே' என்றார் திருவள்ளுவர். 'யான்' 'எனது' என் னும் செருக்கு இருளுலகு உய்க்கும். அவ்விரு செருக்கையும் அறுப்பது வீட்டுலகு உய்க்கும். அது வானோருலகு அன்று. அதற்கும் உயர்ந்தது.

"பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு."

இவ்வுண்மைகளை எல்லாம் சுருக்கித் தன்பாற் கொண்டு கற்றுணர்வோர் உள்ளத்தில் பெருக்கித் தரும் அத்திருப்பாடலை நோக்குமின் புண்ணியர்காள்!

"அநுதினம் நின்றன் அருள்வழி இருக்க
அலைவுறும் கரணம் நிற்கிலையே
அன்போடு பூசை புரியஐம் பொறிகள்
அடங்கிஓர் நெறியில்நிற் கிலையே
எனதியான் என்னும் பற்றுகள் ஒழியும்
ஏதுவோ யாதும்இங் கிலையே
எந்தநாள் எளியேன் சிந்தையில் துயரம்
இரிந்திடப் பரிந்தருள் புரிவாய்
சனனவா ரிதியை அகற்றிடும் குருவே
தமியனேற் குதவும்நற் றருவே
சம்பந்தர் கரத்தில் துலங்கிடும் உருவே
தாசர்கள் மனமலர் மருவே
தினமணி வாரி யெறியலை சண்ட
தீர்த்தம்ஆர் வாழ்வளித் தருளும்
சிகரிசேர் தருமைவளர் சொக்க நாதச்
செல்வமே சிற்சுகோ தயமே" (4)

இதில், மூன்றாவது அடியும் அதன் துணையடியும் 'குருவே தருவே உருவே மருவே' என்று இயைபுற நின்ற தொடையழகை நோக்குக.

---

(தொடரும்)



# ஊழிற் பெருவலி யாவுள

**திருமதி ஜெ. புவனேசுவரி அவர்கள்**
D. II. No. 19, North of Safdarjang Hospital,
New Delhi - 3.



மன் ஆண்ட வேந்தனும் தயரதன் விண்ணுலக மேகப் புகழும்படி பல மகத்தான செயற்கரியச் செயல்களைப் புரிந்தான். ஆயகலைகள் அறுபத்து நான்கினையும் அறியாவிட்டாலும் அறிந்த கலையை அழகுற தம் நாட்டிலே நிலை நிறுத்தினான். தோள்வலி கொண்டு மாற்றலர் முனைகளைச் செதுக்கினான். அற உளம் கொண்டு நாட்டில் அறத்தை வளர்த்தான். அன்பு உளங்கொண்டு மக்களை ஒற்றுமைப் படகில் ஏற்றினான். அடாது கொடுமை செய்பவர்களை விடாது திருத்தி நேர்மைப் பங்காளனாகச் செய்தான். செல்வம் படைத்தோம் என்று சிறுமதிக் கொள்ளாது நாட்டு மக்களின் வாழ்வோடு தானும் சேர்ந்து வாழ்ந்தான். நீதியை வென்று அநீதியை குழி தோண்டிப் புதைத்தான்.

அயோத்தி நகரம் தயரதன் வெண்கொற்றக் குடையால் தன்மைப் பெற்று இருந்தது. குடிகளை அன்போடு அணைத்துக் கொண்டு செங்கோல் செலுத்தினான். அண்ணல் எல்லா உயிர்களுக்கும் அருள் உளங்கொண்டு இன்பம் புரிந்தான். அத்தகைய தயரதன் வெண் கொற்ற குடையைக் கம்பர் பாடுகிறார்.

“மண்ணிடை உயிர்தொறும் வளர்ந்து தேய்வின்றித்
தண்நிழல் பரப்பவும் இருளைத் தள்ளவும்
அண்ணல்தன் குடைமதி அமையும் ஆதலால்
விண்ணிடை மதியினை மிகையிது என்னவே”.

— கம்பராமாயணம்.

வறியவர்க்கு ஒரு பொருளைக் கொடுப்பதே ஈகையாகும் அல்லவா? பழுத்த மரத்தை நாடி பறவைகள் வருவது போல் தயரதனின் அரண்மனையை நோக்கிப் பல புலவர்கள் வந்தனர். வந்தவர் முகம் கோணுமல் பொருளை வாரி வழங்கினுன். அவன் அளித்த செல்வம் புலவர்களின் வறுமையை ஓட்டி விட்டது. அவனுடைய ஈகைத்தன்மையை கம்பர் சடாயு மூலம் காட்டுகிருர்.

"பரவலரும் கோடைக்கும் நின்றன் பனிக்குடைக்கும்
 பொறைக்கும் நெடும் பண்பு தோற்ற
கரவல் அரும் கற்பகமும் உடுபதியும்
 கடலிடமும் களித்து வாழப்
புரவலர்தம் புரவலனே பொய்ப் பகையே
 மெய்க்கணியே புகழின் வாழ்வே
இரவலரும் நல்லறமும் யானும்இனி
 என்படநீத்து ஏகினுயே".

— *கம்பராமாயணம், சடாயு காண்படலம்.*

உலகின் திலகமாக, இரவலரின் புரவலனுக, பகையின் எதிரியாக தயரதன் இருந்ததால் அவனை யாரும் எளிதில் வெல்ல இயலவில்லை. மூன்று உலகங்களிலும் புகழ் பெற்ற அரசனும் இந்திரன், குபேரன், இவர்களுக்கு சமானமாக இருந்தான். 'அயோத்தியா' என்ருல் 'யுத்தத்தால் பிடிக்க முடியாத' என்று பொருள். இத்தன்மை வாய்ந்த தயரதனை யாரும் வெல்லாவிட்டாலும் விதி வென்று விட்டது.

பல ஆயிர மாடுகள் ஒரே இடத்தில் குழுமி இருக்கும்போது பசுக்கன்று ஒன்று தன் தாய் எங்கு உள்ளது என்று கண்டு பிடித்துவிடும். அதைப்போன்று முற்பிறப்பில் நாம் செய்கின்ற நன்மை தீமைப்படி விதி நம்மை இப்பிறப்பில் தொடரும். பாரோங்கும் வேந்தனும், சூரிய குலத்தின் தலைவனும் தயரதனையும் விதி ஆட்டி வைத்து விட்டது.

அக்காலத்தில் மன்னர்கள் காட்டிற்கு வேட்டையாடச் செல்வது வழக்கம். அம்முறைப்படி தயரதனும் ஒரு நாள்

கையார் சிலையும் கணையும் அணிந்து வனம் ஏகினன். நதிக் கரைக்கு அண்மையிலுள்ள ஒரு மரத்திற்குப் பின்புறம் மறைவாக நின்று கொண்டு ஏதேனும் மிருகம் தன் வில்லுக்குக் கிட்டுமா? என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். கருமமே கண்ணு யினராக மாறிவிட்டால் நாம் கூட பிறவற்றைப் பற்றி எண்ணு வதில்லை. நம் லட்சியம் நிறைவேறுகிறதா என்ற ஒரே குறிக் கோளுடன் தான் இருப்போம். மானிடனின் சாதாரண இப்புத்தி தயரதனையும் பற்றிக் கொண்டதில் வியப்பில்லையே!

சிதலைத் தின்னப்பட்ட ஆலமரத்தை அதனுடை விழுதுகள் காப்பாற்றும். அதுபோல் உலகில் எல்லையில்லாத் துன்பங்களை அனுபவித்து, மக்களைப் பேணி வளர்த்து, சீராட்டி கால சக்கரத் திலே உடல் தேய்ந்து உள்ளம் சோர்ந்து வயது முதிர்ந்த பெற்றோருக்கு மைந்தன்தான் துணைக்கோல். அன்னையும், பிதாவும் முன்னறி தெய்வம் என்ற உளங் கொண்ட உருவம் தயரதனின் வில்லில் அகப்பட்டுக் கொண்டது. பெற்றோரின் நீர் வேட்கையைத் தவிர்க்க நீர் முகந்துப்போக வந்த மைந்தனை தயரதனின் வில், யானைதான் நீர் அருந்துகிறது என்று எண்ணி துளைத்து விட்டது.

"ஒருமா முனிவன் மனையொடு ஒளியோன் றிலாவாம் நயனன்
தருமா மகனே துணையாய்த் தவமே புரிபோழ் தினில் வாய்
அருமா மகனே புனல் கொண்டு அகல்வான் வருமா றறியேன்
பொருமா கணைவிட் டிடலும் புவிமீ தலறிப் புரள் வான்."

— கம்பராமாயணம்-நகர் நீங்கு படலம்

நீர் முகந்துக் கொண்டிருந்த உருவம் அலறியது. அந்தி காலத்தில் பெற்றோருக்குத் தொண்டு செய்ய முடியாதபடி இம்மாதிரியான ஒரு நிலைமை ஏற்பட்டு விட்டதே. கண் தெரியாத என் பெற்றோருக்கு இனி யார் கதி? அவருடைய நீர் வேட்கையைத் தணிக்காமலேயே நான் சென்று விடுவேனே, என்செய்வேன்! என்று வாய்விட்டு அலற முடியாமல் உள்ளம் துடித்து, உயிர் இருப்பிடத்தைவிட்டு நகர்ந்து கொண்டிருந்தது.

வேட்டையாடி விட்டோம் என்ற மகிழ்ச்சி பெற்ற தயரதன் தலையிலே ஒரு இடி விழ்ந்தது. ஆம்! யானை என்று

நினைத்ததற்குப் பதிலாக ஒரு மனிதனின் ஈனக்குரல் கேட்டது. உளம் நொந்து மன்னன் விரைந்து ஓடினுன். கண்டான்! திகைத்தான்! தலே சுற்றியது. அவனுடைய அச்செயலேக் கண்டு அவன் உள்ளமே தூற்றுவது போலிருந்தது. நா எழவில்லே. இருப்பினும் செய்த குற்றத்திற்கு மன்னிப்பைப் பெறுவோம் என்று திடப்படுத்திக் கொண்டு சிறுவன் அருகில் வந்தான் தயரதன்.

சிறுவனே நோக்கி, 'நீ யார்?' என்ருன் மன்னன். யான் ஒரு பிராமணன். காசிப முனிவனின் புத்திரனுன விருத்தே சனனுடைய மகன் சலபோசனன் என்ற முனிவன் என் தந்தை. என் பெயர் சுரோணன் என்பது. கண்ணிழந்த பெற்ருேருக்கு நீர் கொண்டு போக வந்த என்னே நீ அம்பால் எய்தது ஊழ் வினேயே யன்றிவேறில்லே. வருந்தாதே! என் மரணச் செய்தியையும் தெரிவி என்ருன் சிறுவன்.

"இருகண் களும்இன் றியதாய் தந்தைக் கும்ஈங்கு அவர்கள்
பருகும் புனல்கொண்டு அகல்வான் படர்ந்தேன் பழுதா யினதால்
இருகுன்ற னைய புயத்தாய் இபம்என்று உணராது எய்தாய்
உருகும் துயரம் தவிர்நீ ஊழின் செயல் ஈதென்றே."

— கம்பராமாயணம்-நகர் நீங்கு படலம்

சுரோணனுடைய ஒவ்வொரு சொல்லும் மன்னனே வதைத்தது. நன்மை செய்யாவிட்டாலும் ஒரு முனிவனுக்குத் தீமை செய்துவிட்டோமே! சிறுவனுயிருந்தாலும் அவன் மதி எத்துணைப் பசுமையாக வளர்ந்துள்ளது. இவனின் பெற்ருேர் இத்தகையானே இழந்து விட்டோம் என்று கேள்விப்பட்டால்..........அவனுல் நினைத்தே பார்க்கமுடியவில்லே. உண்மைதான்! இவ்வளவு அல்லல்ஆன விடயத்திற்கு அவன் வரவில்லே. விதிதான் வழி காட்டி விட்டு விட்டதே.

"அறியாரும் அல்லவர் அறிவ(து) அறிந்தும்
பழியோடு பட்டவை செய்தல் — வளிஓடி
நெய்தல் நறவு உயிர்க்கும் நீள் கடல்தண்சேர்ப்ப
செய்த வினேயான் வரும்

— நாலடியார்

தளர்ந்த உள்ளத்தோடு சுரோணனின் பெற்ருேரை மன்னன் அடைந்தான். தான் செய்த தவற்றை கூறினுன். அவன் அரசனுயிருப்பினும் தான் செய்த குற்றத்திற்கு மன்னிப்பு வேண்டி நின்ருன். மன்னிப்பு கேட்டதோடு அல்லாமல் தான் யார் என்பதையும் தெரிவித்தான். அதனைக் கம்பர்

"ஐயா யானோர் அரசன் அயோத்தி நகரத்துள்ளேன்
மைஆர் மிருகம் துருவி மறைந்தே வதிந்தேன் இருள்வாய்ப்
பொய்யா வாய்மைப் புதல்வன் புனல் மொண்டிடும் ஓதையின்மேல்
கைஆர் கணை சென்ற தலால் கண்ணில் தெரியக்காணேன்".

— கம்பராமாயணம்-நகர் நீங்கு படலம்.

மன்னனின் வாயிலாக விடயம் உணர்ந்த பெற்ருேர் அலறினர். அவர்கள் உள்ளம் வெந்து தவித்தனர். கண்மணி போன்ற மைந்தனை இழந்தோமே? என்செய்வோம் என்று அவர்களை அறியாமல் அவர்கள் உள்ளம் துடித்தது. அதைக் கண்டு தயரதனுல் தாளவே முடியவில்லை. பெரியோர்களே! நான் செய்த தவறைப் பொறுத்து என்னை உங்கள் மைந்தர் போல் ஏற்றுக்கொள்ளுங்கள். நீங்கள் உயிரோடு இருக்கும் வரை நான் உங்களுக்குத் தொண்டு புரிகிறேன், என்ருன் மன்னன்.

இதுகேட்ட அவர்கள் மகன் போய் தான் வாழ மனமின்றி உயிர்துறக்கச் சித்தமாயினர். என் மகவை நாங்கள் இழந்து இப்போது துன்பப்படுவதுபோல் நீயும் உன்னை விட்டு உன் மகன் பிரிவதன் காரணமாக உயிர் இழப்பாயாக! என்று சாபமிட்டனர்.

"தாவாது ஒளிரும் குடையாய் தவறிங் கிதுநின் சரணம்
காவாய் என்ருய் அதனுல் கடிய சாபம் கருதேம்
ஏவா மகவைப் பிரிந்தின்று எம்போல் இடருற் றனைநீ
போவாய் அகல்வான் என்னுப் பொன்னுட் டிடைபோ யினரால்."

— கம்பராமாயணம் - நகர்நீங்கு படலம்.

சாபம் பெற்ற தயரதன் இவையாவும் வினையின் பயனே என்று நினைத்துக் கொண்டான், சாபத்தினுல் அவனுக்கு நன்

மையும் தீமையும் கலந்து இருந்தது. இதுகாறும் மகப்பேற்றுக்குத் தவம் கிடந்ததற்குப் பலன் கிடைத்து விட்டது என்று நினைத்து நாட்டை யடைந்தான்.

காலம் சென்றது. அயோத்தி மன்னனுக்கு நான்கு புத்திரர்கள் தோன்றினர்கள். வளர்பிறைபோல் வளர்ந்தார்கள். கலைகளைக் கற்றுக் கவினுற விளங்கினர்கள். திருமணப் பருவம் எய்தி மங்கையர்களை மாலையிட்டார்கள். தயரதனுக்கு வயது ஏறியது. இனி ராச்சியப் பாரத்தைத் தாங்கமுடியாது என்று கருதி ராமனுக்கு முடிசூட்டக் கருதினன். எண்ணியபடி நடக்கத் துணிந்து விட்டான். ராமனுடைய பட்டாபிஷேகத் திற்கு எல்லையில்லா ஏற்பாடு நடந்துக் கொண்டிருந்தது. அதே சமயத்தில் அரண்மனையின் மற்ரெரு மூலையில் விதி கூனி மூலம் வந்துக்கொண்டிருந்தது. கைகேயியின் தூய உள்ளத்திலே கூனியின் துர்போதனை விஷம் கலந்துவிட்டது. நாடெல்லாம் இராமனுடைய பட்டாபிஷேகச் செய்தி பரவிக்கொண்டிருக்க ஏற்பாடு செய்த தயரதன் கைகேயிக்கு மட்டும் தானே நேரில் சொல்ல விழைந்தான். வந்தான். அந்தப்புர சுந்தரவதி அவனை வந்து வரவேற்கவில்லை. அதற்கு மாருக கைகேயி அணிகலங்கள் அற்றவளாய் தரையிலே பேய் போல் உருண்டுக்கிடந்தாள். அருகில் வந்தான் மன்னன். அவள் ஏறெடுத்துப் பார்க்கவில்லை. அணைத்தான். ஈடுகொடுக்கவில்லை. உன்னை யார் இகழ்ந்தார்? இப்போது சொல், அவர்களை என் வில் தொலைத்து விடும் என்ருன். உன் வில் அவர்களைத் துளைக்காது. என் வரம் உன்னைத் துளைக்கப் போகிறது என்று நினைத்தவளாய் கைகேயி நிமிர்ந்தாள்.

அரசே! நான் தற்போது ஒன்று உங்களிடம் வேண்டுகிறேன். அதை மறுக்காமல் தருகிறேன் என்று சத்தியம் செய்து கொடுங்கள் என்ருள் கைகேயி.

கண்ணே! என் உயிரை உன்மேல் வைத்துள்ளேன். அந்நிலையில் நீ எதைக் கேட்டாலும் தர சித்தமாய் உள்ளேன். என்று சத்தியம் செய்துக் கொடுத்தான் மன்னன்.

அரசே! முன்னாள் நீங்கள் கொடுத்த இருவரங்களை இப்போது நிறைவேற்றுங்கள் என்றாள் கைகேயி.

விதியின் வலியறியாத மன்னன் தருவதாக வாக்களித்தான்.

என் மகன் பரதன் முடிசூடி அரசாள வேண்டும். இராமன் வனம் ஏகவேண்டும் என்றாள் கைகேயி.

கைகேயி சொன்னது தயரதனைப் பாம்பு கடித்ததுபோல் இருந்தது. மனத்துயரம் பொறுக்கமாட்டாமல் உலைக்களத்து நெருப்பைப் போலப் பெருமூச்சு விட்டுக்கொண்டு தந்தேன் என்று கூறி தரையில் வீழ்ந்து புரண்டான்.

மன்னனுக்கு ஆறுதல் கூற வசிட்ட முனிவர் வந்தார். வசிட்டனை நோக்கி அரசன் இவையாவும் முனிவன் சாபப்படி நடக்கிறது. இதைக்கண்டு யான் வருந்துவது வீண்; பயனற்றது என்றான்.

"சிந்தை தளர்வுற் றயர்தல் சிறிதும் இலனாய் இன்சொல்
மைந்தன் உளன் என் றதனால் மகிழ்வோடு இவண் வந்தனனால்
அந்த முனிசொற் றமையின் அண்ணல் வனம் ஏகுதலும்
என்றன் உயிர் வீகுதலும் இறையும் தவறாதென்றான்."

— கம்பராமாயணம் - நகர் நீங்கு படலம்.

உலகில் யாவரும் தீயவற்றை விரும்பமாட்டார்கள். நல்லனவற்றை விரும்புவர். மக்கள் விரும்பினும் விரும்பாவிடினும் பழவினையினால் வருவதற்குரியன வந்தே தீரும். அண்டத்தை வென்று அளவிலாப் புகழ் பெற்றாலும் அவ்வண்டத்தில் உலாவும் விதியை வெல்ல எவராலும் முடியாதன்றோ!

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான் முந்துறும்." —குறள்.

---

2. குருஞான சம்பந்தரின்

# சொக்கநாத வெண்பா

வித்துவான். திரு. ம. சிவசம்பு அவர்கள்

ஸ்ரீ குருஞான சம்பந்தர் அருட் கவிஞர். தேனுய் அமுதமாய்த் தித்திக்கும் தேசிகர். தண்டமிழ்ச் சொல் தென் தருமை ஞானசம்பந்தர். இவர் எழுதிய கவிதைகள் தனிச் சிறப்புடையன. பக்தி ஊட்டிப் பரவசப் படுத்துவன பாம்பு அறியும் பாம்பின்கால் (கால் - புற்று) என்பதுபோல அருட் கவிதைகளின் தன்மைகளை அருட் கவிகளே உணர முடியும். ஸ்ரீகுரு ஞானசம்பந்தர் கவிதை பெரும் புயல் காற்றுப் போன்றது. "கற்றவர் சினந்தருவனத்தையும் அலைக்கும் ஒரு காலான கவிதையாளன்"—என்கிருர் வெள்ளி அம்பலவாண முனிவர். ஸ்ரீகுரு ஞானசம்பந்தர் எழுதிய, பாடிய சாத்திர தோத்திர நூல்கள் 1. சிவபோகசாரம். 2. சொக்கநாத வெண்பா. 3. முத்தி நிச்சயம் 4. திரிபதார்த்தருபாதி தசகாரிய அகவல். 5. சோடச கலாப் பிராசாத சட்கம். 6. சொக்கநாதக் கலித்துறை. 7. ஞானப் பிரகாசமாலை. 8. நவரத்தின மாலை என எட்டு. இவைகள் பண்டார சாஸ்திரங்கள் எனப்படும். இவற்றில் சொக்கநாத வெண்பாவும் ஒன்று. சொக்கநாத வெண்பா ஒரு தோத்திர நூல். ஸ்ரீகுருஞானசம்பந்த சுவாமிகள் தம் ஆன்மார்த்த மூர்த்தியான ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமான் மீது கசிந்துருகிப் பாடியது. இந்நூல் சொக்கநாதனை முன்னிலைப் படுத்தி எழுதப் பெற்ற வெண்பா ஆதலால் சொக்கநாத வெண்பா எனப் பெயர் பெற்றது. நூற்றென்று பாடல்களை யுடையது இந்நூல்.

இச் சொக்கநாத வெண்பாவை இவர் மதுரையில் பாடினுர் எனவும், சிலர் திருவாரூரில் பாடினுர் எனவும், சிலர் தருமையில் பாடினுர் எனவும் கூறுவர். உண்மையை ஆராயின்,

இவர் சொக்கநாத வெண்பா என்று தனி நூலாகப் பாடியது இல்லை என்பதும் தினசரி தன் பூசையில் சொக்கலிங்கப் பெருமானுக்குப் பூமாலை சார்த்தி வழிபட்டது போல, சில தினங்களில் பாமாலையும் சார்த்தி வழிபட்டனர் என்பதும் தெற்றென விளங்கும். "மதுரையில் வாழ்கின்ற ஆரூரா சொக்கநாதா"— என்பதுபோன்ற பகுதி இதற்குச் சான்றாக அமைகின்றது. இவர் பாடிய பாடல்களை எல்லாம் சேர்த்துப் பெரியவர்கள் தனி நூலாகச் செய்திருக்கலாம். இக்கருத்தைப் பாடலின் தொகையாலும் அறிகிறோம். ஆதீன வெளியீடுகளில் சொக்கநாத வெண்பா என்ற தலைப்பில் தொண்ணூற்று நான்கு (94) பாடல்களும் சில பிரதிகளில் காணப்பட்ட பாடல்கள் என ஏழு பாடல்களும் காணப்படுகின்றன. இதுவரை நமக்குக் கிடைத்த பாடலின் தொகை நூற்றொன்று. இன்னும் பல பாடல்கள் கிடைக்கலாம் அன்றோ!

இந்நூல் தோத்திரமாக இருந்தாலும் கந்தர்கலி வெண்பா முதலிய நூல்களைப் போல சாத்திரக் கருத்துக்களையும் அறிவிக்கின்றது. இந்நூலின் மூலம் ஸ்ரீகுருஞான சம்பந்தர் தன் ஆன்மார்த்த மூர்த்திகளிடம் கொண்ட பக்தி நன்கு புலனாகிறது. ஸ்ரீகுருஞான சம்பந்தரின் திருமுறைப் பயிற்சி, புராணப் பயிற்சி, சொல்லாட்சியின் மாட்சி முதலியன தெளிவாக விளங்குகிறது. உவமை மூலம் இவர் விளக்கும் கருத்துக்கள் கற்றோர் கருத்தைக் கவர்வனவாக இருக்கின்றன. சைவசித்தாந்தத்தின் அடிப்படைக் கருத்துக்களைச் சில பாடல்கள் விளக்குகின்றன. நாட்டில் வழங்கும் பழமொழியை எடுத்துக் கையாளுகின்ற முறையே தனி இன்பம் பயப்பதாகும். ஸ்ரீகுருஞான சம்பந்தரின் சிறப் பியல்புகள் பலவற்றையும் இப்பாடல்கள் நமக்கு அறிவிக்கின்றன.

## திருமுறைக் கருத்துக்கள்

ஸ்ரீகுருஞானசம்பந்தர் தேவாரம் முதலிய திருமுறைகளையும், அருட் பெரியோர்கள் பாடல்கள் பலவற்றையும் நன்கு பயின்றிருக்கிறார். இக்கருத்து சொக்கநாத வெண்பாவை நாம் படிக்கும்பொழுது தெரியவரும். "நீரிலே மூழ்கிலுமென், நித்தம்

அருச்சிக்கிலுமென், பாரிலே சுற்றிப் பணியிலுமென்"— என்ற வெண்பா,

"கங்கை யாடிலென் காவிரி யாடிலென்
கொங்கு தண் குமரித் துறை யாடிலென்
ஓங்கு மாகடல் ஓதநீ ராடிலென்
எங்கு ஈசன் என்ளுதவர்க்(கு) இல்லையே."

என்ற திருநாவுக்கரசர் தேவாரத்தை நினைவு படுத்துகின்றது. "நரகம் இனி நாட நாடோம்"— என்ற பாடல் 'நாமார்க்குங் குடியல்லோம், நமனை அஞ்சோம் நரகத்தில் இடர்ப்படோம்' என்ற திருத்தாண்டகத்தையும் "என் நாவே உனைத் துதிக்க, சிந்தை உனை நினைக்க, என்றும் நான் உன்னை வணங்கக் காண்"— என்ற பகுதி 'தலையே நீ வணங்காய்' என்ற திரு அங்கமாலையையும் நினைவு படுத்துகின்றன. இவர் சொக்க நாதனைத் தாயே, ஐயா, அண்ணலே, நேசா, அப்பனே, நாதா, அன்னையே என்றெல்லாம் அழைக்கின்ற பகுதிகள் அப்பன் நீ, அம்மை நீ, அன்புடைய மாமன் நீ, மாமி நீ, என்ற திருத் தாண்டகத்தை நினைவுபடுத்தாமல் இருக்க முடியாது.

"உன்னைச் சிங்காரித்துன தழகு பாராமல்
என்னைச் சிங்காரித்து இடர்ப் பட்டேன்"

என்ற வெண்பாவைப் படிக்கும் பொழுது,

"உன்னைச் சிங்காரித்து உனதழகைப் பாராம லென்னைச்
சிங்காரித் திருந்தேன் பராபரமே"—

என்ற தாயுமானவர் பராபரக் கண்ணி நம் நினைவுக்கு வரும்.

### புராணக் கருத்துக்கள்

இவர், திருவிளையாடற் புராணம், பெரிய புராணம் முதலிய வற்றில் நல்ல பயிற்சி பெற்றிருக்கிறுர். மதுரையைப் பற்றிக் கூறுகின்ற பொழுதெல்லாம் மதுரையில் நடந்த திருவிளை யாடல்களை எல்லாம் குறிக்கின்றுர். அரவம் ஆலவாயின் எல்லையைக் காட்டிய கருத்தை (திருவாலவாயன படலம்) "ஆடரவம்சூழ் மதுரை அம்மானே"— என்ற முதல் பாடலில்

குறிக்கிருர். மாபாதகம் தீர்த்த படலத்தை "பஞ்சமா பாதகனை ஆண்ட புகழ் பார்மீதிற் கொஞ்சமா" என்ற பாடலிலும், எல்லாம் வல்ல சித்தரான படலத்தை எல்லாம் வல்ல சித்தரே (8, 66) என்ற பாடல்களிலும் கன்றிய காலனைக் காலால் உதைத்ததை, கூற்றைக் குமைத்தவனே என்ற பாடலாலும், இராச சேகரனுக்காக கால்மாறி ஆடிய படலத்தை,

"எந்நாளும் கூடலிலே மாறிநடம்
ஆடவல்ல சொக்கநாதா"

என்ற பாடலிலும் பன்றிக்குப் பால் கொடுத்ததை

"....................தாயாய்
அலை கொடுத்த கேழல் அருங்குழவிக்கன்று
முலை கொடுத்தாய் நீயல வோமுன்

என்ற பாடலிலும் குறிக்கின்ருர்.

**உவமைகள்.**

**1. இரும்பு சுடுமோ!**

இரும்புக்குத் தானே சுடும் ஆற்றல் கிடையாது. நெருப்புடன் சேர்ந்து பழுக்கக் காய்ந்தவுடன் இரும்பு சுடுகிறது. தானே சுடும் ஆற்றல் இல்லாத இரும்பு நெருப்பிலே சேர்ந்த காரணத்தால் சுடுகிறது. இந்த உலகத்தைப் படைத்துக் காத்துத் தொழில் செய்கிருர்கள் பிரமா, திருமால் முதலிய தேவர்கள். அவர்கள் தத்தம் தொழிலைத்தாமே செய்யும் ஆற்றல் அற்றவர்கள். இரும்பைப் போன்றவர்கள். இறைவன் திருவருளைத் துணைக்கொண்டுதான் இத்தொழிலைச் செய்கிருர்கள். இரும்பு எப்படி நெருப்பிடமிருந்து சக்தி பெறுகிறதோ அது போல இவர்களும் எல்லாம் வல்ல உன்னிடமிருந்து சக்தி பெறுகிருர்கள்.

"எரி சுடுவதல்லால் இரும்பு சுடுமோ
அரிஅயற்கும் வாசவற்கும் யார்க்கும் – பெரியவர்க்கும்
பூணுமே தத்தொழில் நின்பொன்னருளால் தென்மதுரைத்
தாணுவே சொக்கநா தா."

2. கண்கட்டு வித்தை.

வித்தைக்காரன் ஒருவன் ஒருமாங்கொட்டையை மண்ணில் புதைத்து, தண்ணீர் ஊற்றிக் கூடையால்மூடி சிறிது நேரத்தில் மாஞ்செடியுடன் காய்க்கச் செய்கிறான். ஆணைப் பெண்ணாக மாற்றுகிறான். ஒருவனைப் படுக்கவைத்து தலையை வெட்டியது போல உருட்டிக் காட்டுகிறான். இந்தக் காட்சிகளை நம் கண்ணால் காண்கின்றோம். ஆனால் உண்மையில்லை. உண்மையில்லாததை உண்மை போலச் செய்து காட்டுகிறான். நாமும் நம்புகிறோம். இதைப்போலவே இறைவன் உயிர்களை கன்ம வினைக்கு ஏற்ப புதியபுதிய உடலில் புகுத்தி வித்தை காட்டுகிறான். நிலையற்ற உடலைச் சுமக்கின்ற நாம் அவ்வுடம்பு நிலையுள்ளதாக எண்ணி மயங்குகிறோம். இப்படி மயங்கச் செய்கின்றவனும் அவனே. இதை அறிந்த குருஞானசம்பந்தர், இறைவனே! கண் கட்டு வித்தைக்காரன் மக்களை மயக்கமுறச் செய்வது போல என்னையும் மயக்கமுறச் செய்கிறாயே, எனக்கு உண்மையான அருள் எப்பொழுது கூட்டுவாய்" என்று கேட்கிறார்.

"புண்கட்டு தோலைப் புதுக்கி மயக்கமுறக்
**கண்கட்டு வித்தைபோல் காட்டுவாய் – பண்கட்டுப்**
பூணுவேன் தன்னை இன்ப பூரணத்தில் பூணஅருள்
தாணுவே சொக்கநாதா."

3. சூரியனும் பனியும்.

சூரியனைக் கண்டவுடன் பனிநீங்கும். பாசமாகிய பனி உயிர்களை வாட்டுகிறது. குளிர்தாங்காமல் உயிர்கள் வருந்துகின்றன. இறைவனே உன் அருளாகிய சூரியன் தோன்றினால் இந்தப் பாசமாகிய பனிதானே நீங்கும். உன் அருளாகிய சூரியன் தோன்றுவது எப்போது? இப்பாசம் நீங்குவது எப்போது? சொக்கநாதனே! நீ இதற்கு அருள் செய் என்று கேட்கிறார்.

"கூரியவெம் பாசக் குளிர்நீங்க நின்னருளாஞ்
சூரியன் எப்போது வந்து தோன்றுமோ."

இவ்வாறு இவர்கூறும் உவமை நயங்கள் பல. தம் ஆன்மார்த்த மூர்த்தியை ஒரு பெண் தன் காதலனைக் காதலிப்பது

போல காதலிப்பதாகக் கூறுகிறார். கற்றவரையும் கல்லாத வரையும், ஏழையையும், பணக்காரனையும் இறைவன் வித்தி யாசம் இல்லாமல் ஆட்கொள்ளுகிறான் என்பதை "வறிஞர் தம்மை யொக்க வைக்கும் மன்னர் போல்" என்று உவமை மூலம் விளக்கு கிறார்.

## 4. பழமொழி வந்த இடம்.

நல்லது செய்தால் நல்லது கிடைக்கும். தீயது செய்தால் தீயது கிடைக்கும். தீமை செய்தவன் மீண்டும் மீண்டும் பிறந்து துன்பத்தை அனுபவிக்கிறான். நன்மை செய்தவன் இன்பத்தில் திளைக்கிறான். இதற்கு நல்லதொரு உவமை கூறுகிறார் ஞான சம்பந்தர். மக்கள் எந்த விதையைப் பயிரிட்டார்களோ அதைப் போல்தான் இருக்கும் விளைவு. இக்கருத்தை 'தினைவிதைப்பவன் தினை அறுப்பான் - வினை விதைத்தவன் வினை அறுப்பான்' என்ற பழமொழி நமக்கு நன்கு விளக்குகிறது. அதைப்போலத் துன்மார்க்க வித்து இட்டால் பிறப்பு. சன்மார்க்க வித்து இட்டால் முத்தி என்கிறார்.

"எவ்விதையை மாக்கள் பயிர் இட்டார்கள் இட்டவரே
அவ்விதையின் போகம் அருந்துதல்போல் – செவ்விதாய்த்
துன்மார்க்கம் செய்தவர்க்குத் தோன்றும் பிறப்பு முத்தி
சன்மார்க்கம் சொக்கநாதா."

## சித்தாந்தக் கருத்துக்கள்.

எல்லாம் வல்ல இறைவன் அருள் இன்றி உலகில் ஓர் அணுவும் அசையாது என்பதை 'நீயியற்றல் ஆக்காதணுவும் அசையுமோ" என்ற பாடல் மூலம் விளக்குகிறார். இறைவன் தத்துவம் கடந்தபொருள் என்பதை "ஆறாறு தத்துவத்தும் ஆணவத்தும் சாராமல் மாறாத பேரின்ப வாரிதியே" என்றும் "ஆறாறுதத்துவத்தும் ஆணவத்தும் மாறாதெந்நாளும் மயங் காமல்" என்றும் உணர்த்துகிறார். உயிர்கள் முத்தி இன்பம் அடைய 1. உலகவெறுப்பு. 2. உடல்வெறுப்பு 3. மலவெறுப்பு என மூன்று உண்டாக வேண்டும் என்று கூறுகிறார்.

"உலகவெறுப்பும் உடல்வெறுப்பும் உள்ளத்
திலடு மலவெறுப்பும் எல்லாம் – அலகிறந்த

நந்தாத இன்ப சுகநாட்டின் விருப்பமுறத்
தந்தாள்வை சொக்கநாதா.

இறைவன் ஆசானாக வந்து ஆசான் உளத்திருந்தும் ஆன்மா உளத்திருந்தும் மாறாது எந்நாளும் மலத்தைப் போக்குகிறான் என்பதை

"ஆசான் உளத்திருந்தும் ஆன்மா உளத்திருந்தும்
மாசார் மலத்தை அறுத்தருளி –

என்ற பகுதி மூலம் விளக்குகிறார்.

## சிறப்பியல்புகள்.

இதுகாறும் கூறிய செய்திகள் குருஞானசம்பந்தரின் புலமையையும் உலகியல் அறிவையும் எடுத்துக்காட்டும். சொக்கநாத வெண்பாவைப் படிக்கின்றபொழுது இவரது உள்ளப்பண்புகள் நன்கு புலனாகின்றன.

### 1. அடக்கம்.

அருள் பெற்ற புலவராகிய இவர்,
'எல்லார் கருத்தும் இதமா உரைக்கறியேன்' – 53
'என்போல் மலகடினர் எவ்விடத்துங் கண்டதுண்டோ' – 66
'நாயேன் உளமகிழ நன்றாக உணர்த்திடுவாய்' – 15
'பொல்லாத நாயேனை' – 5

என்று கூறுகின்ற பகுதி இவரது தன்னடக்கத்தை நன்கு புலனாக்கும். இவ்வளவு தன்னடக்கம் உள்ள இவர் வீறுகொண்டு எழும் சில இடங்களும் உண்டு.

### 2. வீறுகொண்டு எழும் வீரர்.

1. நோயால் வருந்தியுனை நூறுகுரல் கூப்பிட்டால்
   நீயா ரென்று திருக்கை நீதியோ - 57
2. தன்னந் தனியே தமியேன் முறையிட்டால்
   இன்னுந் திருச் செவியில் ஏறாதோ —65
3. முன் அளவில் மாக்களுக்கு முக்தி கொடுத்த அருள்
   என் அளவில் சும்மா இருப்பதேன் – 56

என்ற பகுதி இவர் வீர உள்ளத்தை எடுத்துக் காட்டுகின்றன வன்றோ? அதுமட்டுமா, இறைவனே என் அளவில் நீ கருணை செய்யாது இருந்தால் நீ இருப்பது பொய், ஆனந்தம் பொய், கருணை பொய், நீ உரைத்த வேதம் பொய். எல்லாம் பொய் யாகப் போய்விடும் என்று கூறுகிறார்.

"நின்னளவில் ஆனந்த நின் கருணை சற்றேனும்
என்னளவில் தோற்ற திருந்தக்கால்—நின்னளவில்
பூரணம் பொய், ஆனந்தம் பொய் கருணைபொய் உரைத்த
ஆரணம் பொய் சொக்கநாதா" – 90

### 3. ஆசை அற்றவர்.

இவர் இறைவனிடம் பொன்னும் பொருளும் போகமும் கேட்கவில்லை, பிறப்பு ஒழிய வேண்டும், பேசா அனுபூதி பிறக்க வேண்டும், உனக்குப் பணி செய்யவேண்டும் என்ற மூன்றை மட்டுமே வேண்டுகிறார்.

### பிறப்பு ஒழிய வேண்டும் என்பதை:

1. எக்காலம் மீண்டும் வாராதகதி மேவிப்பாய் – 93
2. அடியேனை மீண்டும் பிறவாதுன் விரைமலர்த்தாள் சூட்டி-31
3. இறந்தும் பிறந்தும் இளைத்தேன் இனியான்
   மறந்தும் பிறவா வரம் தா—சிறந்தபுகழ்
   ஞாலவாயா முடிக்கு நாட்டு சூளாமணியாம்
   ஆலவாய்ச் சொக்க நாதா. – 10

என்ற பாடல்கள்மூலம் வேண்டுகிறார்.

### பேசா அனுபூதி பிறக்க வேண்டும்.

உள்ளத்தில் ஆசாபாசங்களை அகற்றினால் தான் பேசா அனுபூதி பிறக்கும். ஆசாபாசங்களை நீக்க எக்காலம் இக் கரணம் இற்றிடுமோ, எக்காலம் மெய்க்கே இரையிடுதல் நீங்குமோ, எக்காலம் என் வினைகள் தொலையுமோ! எக்காலம் மும்மலங்கள் போகுமோ! என்றெல்லாம் வேண்டுகிறார்.

1. பேசாநு பூதிபிறக்க எனதுளத்தில்
   ஆசா பசாசை அகற்றுவாய் – 9

2. எக்காலம் மெய்க்கே இரையிடுதல் இற்றிடுமோ
எக்காலம் இக்கரணம் இற்றிடுமோ – எக்காலம்
பேசாநு பூதிபிறந்திடுமோ என்னுளத்தில்
ஆசானே சொக்கநாதா. – 40

உனக்குப்பணி செய்ய வேண்டும்.

சொக்கநாதனே, உனக்குப்பணி செய்யவேண்டும். உன்னை எந்நாளும் நினைக்க வேண்டும். மனக்கவலையைப் போக்க வேண்டும். இதற்கு நீ வரம் தரவேண்டும் என்று வேண்டுகிருர்.

“உனக்குப் பணிசெய்ய உன்றனையெந் நாளும்
நினைக்க வரமெனுக்கு நீதா – மனக்கவலை
நீக்கின்ற தென்மதுரை நின்மலனே எவ்வுலகும்
ஆக்கின்ற சொக்கநாதா”.

4. தமிழ்ப்பற்று மிக்கவர்.

இவர் சிவபோகசாரத்தில் தம் ஆசிரியைரைப் பேசுதமிழ் ஞானப் பிரகாசன் என்று குறித்தது போலவே மதுரையைக் குறிக்கின்ற பொழுதும் விரகர் தமிழ் மதுரை நல்லார் புகழ் மதுரை என்று குறிப்பிடுகிருர்.

ஸ்ரீ குரு ஞானசம்பந்தர் கருவிலே திருவுடையவர். சிறந்த சிவபக்தர். உலகியலை உணர்ந்த முனிபுங்கவர். திருமுறைப் பற்று மிக்கவர். இவர் சொக்கநாதனிடம் முறையாடுகின்ற இப்பகுதிகள் உள்ளத்தை உருக்குவனவாக இருக்கின்றன. இறைவனே! என் வினையைக் கெடுத்து எனக்குப் புகழைக்கொடு. நித்தம் எழுந்தருளி நின்மலனே எனக்குப் புத்தி மிகவும் போதிக்க வேண்டும் சித்த மயக்கம் போக்க வேண்டும். நான் விதிமார்க்கங்களை எப்போதும் அறியாதவன். எனக்கு மெய்யாம் கதிமார்க்கம் காட்டவேண்டும். நான் தவமோ சிறிதறியா தவன். நான் செய்யும் அவமோ அளவில்லை. இதை நான் உணர்ந்து செய்ய வில்லை. நீ உணர்த்திஞல் உணர்வேன். உணர்த்தாயேல் நாயேன் கணத்தும் உணரும் வகைகாணேன். நான் பேரன்பன் அல்லன். பிழைசெய்யாதானும் அல்லன் அன்பில்லாத உலுத்தன் நான். எனக்கு அன்பு காட்டி இன்பத் தொட்டிலிலே ஆட்டி வளர்க்க வேண்டும் என்று வேண்டுகிருர்.

"பேரன்பன் அல்லன் பிழைசெய்யான் தானல்லன்
ஓரன்பும் இல்லா உலுத்தனேன் – பேரன்பு
காட்டிஎனைக் காட்டியுனைக் காட்டியின்பத் தொட்டிலிலே
ஆட்டிவளர் சொக்க நாதா".

இம்மட்டோ!

"ஆறுதலை இல்லை அடியேனுக் கன்பாகத்
தேறுதலை சொல்வார் சிலர்இல்லை – வேறெனக்குத்
திக்காரும் இல்லை சிவனே பழிக்கஞ்சிச்
சொக்கேநின் தாளே துணை."

என்று வேண்டுகிறார். இப்பாடல்களைப் படிக்கின்ற பொழுது நம் கண்ணில் கண்ணீர் வருகிறது. திருவாசகத்திற்கு உருகுவது போல் இவர் வாக்கிற்கும் நாம் உருகுகிறோம். இறைவனுக்கு நாம் அன்பர் ஆகுகின்றோம். இக்கவிதைகள் நம்மனத்தை வாழைப் பழத்தினும் கனிவிக்கச் செய்கின்றன. நம் வாழ்வின் அல்லல் தீர்க்கும் அருமருந்தாக இருக்கின்றன. நம் வாழ்க்கைக்கு வழிகாட்டுவதும், வாழ்விப்பதுமாக இருக்கின்றன. இவற்றைப்படித்துப் பயன் எய்துவோமாக.

---

திருப்பனந்தாள் காசி மடம்

## ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாத தம்பிரான் அவர்களின்

நினைவு நாளில்

சென்னை அடையாறு கலாக்ஷேத்திரம்

டாக்டர். சாமிநாதையர் நூல்நிலையத்துப் பணியாற்றும்

திரு. E. S. வரதராஜய்யர் அவர்கள், B. A., பாடிய வாழ்த்து.

---

முன்னுளில் மூங்கை யெனவந்து செந்தில் முருகனருள்
தன்னுற் கவிஞன் எனவாகி நின்ற தமிழ் முனிவன்
பொன்னுர் பனசை மடத்தின் இறைமை புனைந்துயர்ந்த
நன்னுவலவன் புகழ்ச்சாமி நாத நலத்தகையே. 1

சொல்லேர் கரும்பிற் கரும்பேர் கமுகினிற்றேன்றிவளர்
பல்லேர்கள் கொண்டகழனிகள் சூழ்ந்த பனசைநகர்
எல்லேய் மடத்தின் அமர்ந்துயர் சைவமும் மேர்தமிழும்
வல்லே வளர்த்த புகழ்ச்சாமி நாத வரோதயனே. 2

போற்றுந ரின்றிக் கிடந்த தமிழெனும் பொற்பணங்கின்
ஏற்றம் உயர்தரச் சைவம் வளர எழிற் புலவோர்
நாற்றிசை யும்பர வச்செய்த நன்கொடை நாயகனும்
சாற்றருஞ் சீர் கொண்ட வண்சாமிநாத தனிவள்ளலே. 3

ஆன்ற தமிழ்க் கொடிக் கேய்கொழு கொம்புசித் தாந்தமெனும்
சான்றவர் போற்றும் நெறிபடர் தாருதமிழ்ப் புலவோர்க்
கூன்றுகோல் சீர்கொள் பனசை மடத்தி னுயர்தலைமைத்
தோன்றல் புகழ்சால் அருணந்திப் பேர்கொண்ட தூய்மையனே. 4

செய்ய தமிழ்மகள் சித்தாந்த சைவமும் செந்நெறியும்
உய்ய வுதித்தவன் சைவத் திருமுறை யோதியவன்
துய்யன் கொடைத்தரு தென்பனசை மடத்தோன் றலவன்
ஐயன் அருணந்தி வாழ்கபல் லாண்டின்னளி சிறந்தே. 5

பண்ணுர் தமிழும் பரவுறு சைவமும் பல்வொளிர்
விண்ணுர் தருவினிற் பொன்பொழி வோனுயர் மேதகையாம்
தண்ணு ரளியன் பனசை மடத்தருள் நந்தியவன்
பெண்ணுரும் பாகன் அருள் பெற்று வாழ்க பெருநிலத்தே. 6

தண்டமிழ்க்கும் சைவம் தனக்கும் அரைக்கோடி
கொண்டலெனப் பொன்பொழியும் கோமகன்—வண்பனசைக்
காசிமடத் தண்ணல் கருணை அருணந்தி
மாசிலான் வாழ்க மகிழ்ந்து. 7

---

## திருப்பனந்தாள் - ஸ்ரீ காசி மடம்

# ‘திருமுறை வெளியீடுகள்’



| | | | ரூ. ந. பை |
|---|---|---|---|
| 1 | விநாயகர் திருமுறை | ... | 0 06 |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் | ... | 6 00 |
| 3 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் | ... | 3 00 |
| 4 | திருஞானசம்பந்தர் தேவாரம் (மூலம்மட்டும்) அச்சில் | ... | |
| 5* | திருநாவுக்கரசர் தேவாரம் ,, | ... | 2 25 |
| 6* | சுந்தரர் தேவாரம் (புதிய பதிப்பு) ,, | ... | 1 30 |
| 7* | திருவாசகம் (புதிய பதிப்பு) ,, | ... | 0 50 |
| 8* | திருக்கோவையார்-பேராசிரியர் உரையும் பழையவுரையும் (புதிய பதிப்பு) | ... | 2 90 |
| 9 | ஒன்பதாம் திருமுறை-திருவிசைப்பா திருப்பல்லாண்டு (மூலம்மட்டும்) | ... | 0 56 |
| 10* | திருமந்திரம் ,, (புதிய பதிப்பு) | ... | 2 25 |
| 11 | பதினேராந்திருமுறை ,, | ... | 1 25 |
| 12 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி (புதிய பதிப்பு) | ... | 0 25 |
| 13 | திருக்கைலாயஞானவுலா - உரையுடன் | ... | 0 50 |
| 14 | பெரிய புராணம் (மூலம்மட்டும்) | ... | 2 50 |
| 15* | அகத்தியர் தேவாரத்திரட்டு | ... | 0 37 |
| 16 | திருவிளையாடற் புராணம் (மூலம்மட்டும்) | ... | 3 00 |
| 17 | தாயுமான சுவாமிகள் பாடல்-குறிப்புரையுடன் (அச்சில்) | ... | |
| 18 | கந்தபுராணச் சுருக்கம் (மூலம்மட்டும்) | ... | 1 75 |
| 19 | கந்தபுராணம் – முதல் மூன்று காண்டங்கள் ,, | ... | 2 75 |
| 20 | ,, யுத்த தேவகாண்டம் ,, | ... | 2 00 |
| 21 | ,, தக்ஷகாண்டம் ,, | ... | 1 50 |
| 22 | கந்தபுராண வசனம் (அச்சில்) | | |
| 23 | கந்தர் அலங்காரம் - குறிப்புரையுடன் | ... | 0 25 |
| 24 | கந்தரனுபூதி | ... | 0 13 |
| 25 | கந்தர் கலிவெண்பா – ஆங்கிலம் ஹிந்தி மொழி பெயர்ப்புக்களுடன் | ... | 0 37 |
| 26 | கந்தர் கலிவெண்பா - மூலம் மட்டும் | ... | 0 06 |
| 27 | கந்தர் கலிவெண்பா - மூலமும் – உரையும் | ... | 0 37 |
| 28 | நீதிநெறி விளக்கம்-ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது | ... | 0 50 |
| 29 | சகலகலாவல்லிமாலை – ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது | ... | 0 06 |
| 30 | சிவஞான சித்தியார், ஹிந்தி மட்டும் | ... | 1 00 |
| 31 | திருக்குறள் - அறத்துப்பால் மூலம் குறிப்புரையும் ஹிந்தி மொழி பெயர்ப்பும் | ... | 1 50 |
| 32 | திருக்குறள் – பொருட்பால் ,, | ... | 2 50 |
| 33 | திருக்குறள் – காமத்துப்பால் ,, | ... | 1 00 |
| | ஷை 31, 32, 33 திருக்குறள் 3 புத்தகமும் | ... | 4 00 |

Registered With the Registrar of Newspapers for India
Under No. R. No. 1485/57.

Regd No. M. 5574 குமரகுருபரன்.

| | | | |
|---|---|---|---|
| 34 | திருக்[illegible]லமும் குறிப்புரையும் | ... | 0 75 |
| 35 | திருக்குறள் - பொருட்பால் பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் | ... | 0 13 |
| 36 | முதுமொழி மேல் வைப்பு (குறிப்புரையுடன்) | ... | 0 75 |
| 37 | திருவுசாத்தானக் கல்லெழுத்துக்கள் | ... | 0 37 |
| 38 | திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா - மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் - மதுரைக் கலம்பகம் - நீதிநெறி விளக்கம் - மதுரை மீனாட்சியம்மை இரட்டைமணி மாலை- மதுரை மீனாட்சியம்மை குறம் | ... | 2 75 |
| 39 | திருவாரூர் நான்மணிமாலை – முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ் | ... | 1 25 |
| 40 | சிதம்பர மும்மணிக்கோவை - சிதம்பரச் செய்யுட்கோவை- தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை | ... | 1 00 |
| 41 | பண்டார மும்மணிக் கோவை – காசிக் கலம்பகம் – சகலகலாவல்லி மாலை | ... | 1 00 |
| 42 | சிதம்பரச் செய்யுட்கோவை | .... | 0 75 |
| 43 | முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் [அச்சில்] | | |
| 44 | தமிழிசைப்பாக்கள் [அச்சில்] | | |
| 45 | பெரியபுராணம் – உரைநடை | ... | 2 00 |
| 46 | திருவிளையாடற் புராணம் – உரைநடை | ... | 2 25 |
| 47 | குமரகுருபர சுவாமிகள் ஜீவிய சரித்திரப்பட விளக்கங்களும் கந்தர்கலிவெண்பா விளக்கப்படங்களும் | ... | 0 50 |
| 48 | அபிராமி பட்டர் பிரபந்தம் (மூலம்மட்டும்) (அச்சில்) | ... | |
| 49 | திருக்கயிலைத் திருமுறை | ... | 0 37 |
| 50 | திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் | ... | 0 19 |
| 51 | செந்திலாண்டவன் மகிமை | ... | 0 13 |
| 52 | திருக்குறள் - உரைக்கொத்து - அறத்துப்பால் 3-ம் பதிப்பு | ... | 1 37 |
| 53 | ஷை ஷை பொருட்பால் | ... | 2 75 |
| 54 | ஷை ஷை காமத்துப்பால் | ... | 1 20 |
| 55 | அபிராமி அந்தாதி – தெளிவுரையுடன் | ... | 0 50 |
| 56 | மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் (குறிப்புரையுடன்) | ... | 0 50 |

மேலேகண்ட நூல்கள் கிடைக்குமிடங்கள்:-

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோவில், ஸ்ரீவைகுண்டம்.
2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள்,
*"தியாகராஜ விலாசம்" 53, பிள்ளையார் கோவில்தெரு,*
*திருவேட்டீஸ்வரன்பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை - 5.*

குறிப்பு:- • இக்குறியிடப் பெற்றவற்றின் விற்பனைத் தொகை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற பன்னிரு திருமுறைப்பதிப்பு நிதியைச்சாரும். மற்ற நூல்களில் திருக்குறள் உரைக்கொத்து (எண் 52, 53, 54) தவிர்த்து எஞ்சியவற்றின் விற்பனைத்தொகை 'குமரகுருபரன்' பத்திரிகையைச்சாரும்.

அச்சிட்டது:— குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம் – '61.